உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—*திருவள்ளுவர்.*



தொகுதி 22 | தாது ௵ ஆவணி௴ ௧௳ | 1936 ௵ ஆகஸ்டு௴ 16௳ | பகுதி 2

## கடவுள் வணக்கம்.

*அனந்தபத வுயிர்கள்தொறும் உயிராய் என்றும்*
*ஆனந்த நிலையாகி அளவைக்கு எட்டாத்*
*தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்*
*சதசத்தாய் அருட்கோயில் தழைத்த தேவே*
*இனம்பிரிந்த மான்போல்நான் இடையா வண்ணம்*
*இன்பமுற அன்பர்பக்கல் இருத்தி வைத்துக்*
*கனத்தருமா கனமேதண் அருளிற் தானே*
*கனிபலித்த ஆனந்தக் கட்டிப்பேறே.* (1)

---

*பேறனைத்தும் அணுவெனவே யுதறித் தள்ளப்*
*பேரின்ப மாகவந்த பெருக்கே பேசா*
*வீறனைத்தும் இந்நெறிக்கே யென்ன என்னை*
*மேவுஎன்ற வரத்தேபாழ் வெய்ய மாயைக்*
*கூறனைத்துங் கடந்தஎல்லைச் சேடமாகிக்*
*குறைவறநின் றிடுநிறைவே குலவா நின்ற*
*ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி*
*யத்தனையுந் தொடர்ந்துபுகும் ஆதி நட்பே.* (2)

---

*அழுக்கார்ந்த நெஞ்சுடையேனுக்கு ஐயாநின் அருள்வழங்கின்*
*இழுக்காகும் என்றெண்ணியோ இரங்காத இயல்புகண்டாய்*
*முழுக்காதலாகி விழிநீர் பெருக்கிய முத்தரெனுங்*
*குழுக்காண நின்றுநடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே.* (3)

---

*தன்செயலால் ஒன்றுமில்லை தானென்றால் நான்பாவி*
*நின்செயலாய் நில்லா நினைவுஎன் பராபரமே.* (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் இறைவனது பரத்துவத்தை விளக்குகின்றார்.

(இ-ள்.) பலவிதமான நிலையிலுள்ள உயிர்களுக்கெல்லாம் உயிராகி, எப்பொழுதும் இன்ப நிலையமாகி, பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் ஆகிய பிரமாணங்களுக்கும் எட்டாத ஏகாந்தமான சிற்சொரூபமாத்திரமாகி, அடிமுடி காட்டாத சத்தும் அசத்துமாகி திருவருளாகிய கோயிலில் திகழுந் தெய்வமே! தன் இனத்தைவிட்டுப் பிரிந்த மானைப்போல நான் அலமுறாத வாறு இன்பநிலை யெய்த உனது மெய்யன்பர் இடையே சேர்த்துவைத்து பெருமையை யளிக்கின்ற விழுப் பொருளே! குளிர்ந்த கருணையினால் கனி யாகப் பழுத்த இன்சுவைதரும் கரும்புக் கட்டிப் பேறே! (எ-று.)

உயிர்கள் பலவிதமான ரூபங்களை யடைவதால், "அனந்தபத உயிர்கள்" என்றும், ஆண்டவன் அங்கு இங்கு என்னாதபடி எங்கும் பிரகாசமாய் நிறைந் திருக்கிறான் என்ற உண்மையைத் தெரிவிக்க, "அனந்தபத உயிர்கள்தொறும் உயிராய்" என்றும், கேவலம் தருக்கவாதக் கண்கொண்டு கடவுளைக் காண முடியாதென்பார், "அளவைக்கு எட்டாத் தனந்தனிச் சின்மாத்திரமாய்" என்றும் தாயுமான சுவாமிகள் இப்பாடலில் அழகாக எடுத்துக் கூறியிருக் கிறார்.

2. இதனால் ஆண்டவன் சகலமுமா யிருக்கிறார் என்று தெரிவிக்கிறார்.

(இ-ள்) சகல சம்பத்துக்களையும் துச்சமாக நினைத்து உதறித் தள்ளும் படியாகப் பேரின்பமாக வந்த இன்ப வெள்ளமே! இவ்வீட்டு நெறிக்கே மோன நிலையாகிய பெருமை யாவும் என்று குறிப்பிட்டு, அடியேனை அச்சன் மார்க்கத்தைச் சார்வாயாக என்று கூறியருளிய பெரும் பயனே! பாழான கொடிய மாயையின் சக்திகள் யாவற்றையுங் கடந்த எல்லையாகிய சேஷமாகிக் குறைவின்றி நிலைத்து நிற்கும் பரிபூரணமே! காணப்படுகிற ஆறுகள் யாவும் போய்க் கலக்கின்ற பெரிய கடலைப்போல கோடிக் கணக்கான சமயங்க ளெல் லாம் தொடர்ந்து சேரும் முதன்மையான தொடர்பே! (எ-று).

சிவானந்த வெள்ளத்தின் முன்னே உலக இன்ப மனைத்தும் அணுவாகத் தோன்றுவது இயற்கை யென்பார், "பேறு அனைத்தும் அணுவெனவே யுத றித்தள்ளப் பேரின்பமாக வந்த பெருக்கே" என்றும், சமய பக்தர்களுக்கெல் லாம் தோன்றாத் துணைவனாய் இருப்பவன் ஆண்டவனே என்பார், "சமய கோடி யத்தனையுந் தொடர்ந்துபுகும் ஆதி நட்பே" என்றுங் கூறினார்.

3. இதனால், தமக்குக் கருணை பாலிக்காததற்குக் காரணமென்ன என்று கேட்கிறார்.

(இ-ள்.) தலைவா! பேரன்பால் கண்ணீர் பெருக்கி நிற்கும் ஜீவன் முக் தர்கள் கண்டுகளிக்க சிதம்பரத்தில் நடனமாடும் பரஞ்சோதியே! அழுக்கு நிறைந்த மனமுடைய எனக்கு உனது திருவருளை வழங்கினால் கேவலமாகும் என்று கருதியோ அடியேன்பால் இரக்கங் காட்டா திருக்கிறீர்கள்? (எ-று.)

4. இதனால் எல்லாம் சிவன் செயலே எனத் தெரிவிக்கிறார்.

(இ-ள்.) பராபரமே! என் செயலால் ஒன்றும் நடப்பதில்லை என அறிந்திருப்பேனாயின், பாவியாகிய நான் உன் செயல்வழி நிற்காத நினைவைக் கொண்டிருப்பதேன்? (எ-று.)




# மதம் என்ன சட்டையா?





மதம் என்றால் என்ன? மதம் என்னுஞ் சொல்லுக்குக் கொள்கை என்பதே பொருளாகும். 'நான் யார்? என் உள்ளம் ஆர்? என்னை யார் அறிவார்?' என்பன போன்ற விஷயங்களை விசாரிப்பது எதுவோ அதுவே மதமெனப்படும். அதுவன்றி வாழ்க்கையில் ஒருவித ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் உண்டுபண்ணி மக்களை நன்னெறி செலுத்துவதே மதமெனப் பெரியோர்கள வருணித்துச் சென்றிருக்கின்றனர். மக்களை மாக்களி (மிருகங்களி) னின்றும் பிரிப்பது மதமேயாகும்.

அவ்வித மதம் உலகின் பாகங்களிலும் பலவித பெயர்களோடு ஆங்காங்குள்ள மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஒன்று பலவாய்ப் பிரிந்து வேற்றுமைகள் மலிந்ததாய்க் காணப்பட்டாலும், எல்லா மதங்களின் அடிப்படையான கொள்கைகளும் ஒரேவிதமாகவே இருக்கின்றன. பரந்த நோக்கமும் விரிந்த சமரச மனோபாவமுமுடையோர்க்கு இவ்வுண்மை இனிது புலனாகும்.

இம்மதங்களின் உண்மைத் தத்துவத்தை யுணராதவர்கள்தான் அவைகளில் வேற்றுமை கற்பித்து, 'என் மதந்தான் சிறந்தது; உன் மதம் மிகவுந் தாழ்ந்தது' என்று கூறிச் சண்டை போட்டுக்கொண்டு வருகின்றனர்.

உலகிலுள்ள பல வேற்றுமைகளோடு, இம்மத வேற்றுமையும், சண்டையும் சேர்ந்து உலகையே கலக்கிவருகிறது. இந்நிலைமை நீடித்துக்கொண்டே வந்தால் மனித சமூகம் கூடிய சீக்கிரம் க்ஷீணித்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. இவ்வாபத்தான நிலைமை ஏற்படாதவாறு தடுத்து உலக சகோதரத்துவத்தையும் நல்லெண்ணத்தையும் நிலைநிறுத்துவதற்காகவே, ஐரோப்பாவிலுள்ள அறிஞர் பெருமக்கள் பல வருடங்களாக சர்வமத மகாநாடு நடத்திவருகிறார்கள். அம்மகாநாடுகளில் சர்வதேச மதப் பிரதிநிதிகள் ஒவ்வொருவரும் தங்கள் தங்

கள் மதக் கொள்கைகளை எடுத்துச் சொல்லி, உலக சகோதரத்துவத்தையும், ஐக்கிய மனோபாவத்தையும் பரவச் செய்யக்கூடிய வழிகளைப் பற்றி யோசித்து ஒருவித முடிவுக்கு வருகிறார்கள். 'உலக சகோதரத்துவமே ஜன சமூக விமோசனத்துக்கு ஏற்ற மருந்தாகும்' என்ற பெரு நம்பிக்கையோடு அவர்கள் வேலை செய்து வருகிறார்கள்.

அவ்விதம் மதங்களிலுள்ள முக்கிய கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டு பல மதஸ்தர்களிடையே ஒற்றுமையுண்டாக்கி மக்களை ஒத்துழைக்கச் செய்யப் பாடுபட்டுவரும், சர்வமத மகாநாட்டுப் பேரறிஞர்களே இப்போது உலகம் போகும் நிலைமையைக் கண்டு மனம் நடுங்குகின்றனர்.

சமீபத்தில் லண்டன்மா நகரில் நடைபெற்ற சர்வமத மகாநாட்டைத் திறந்து வைத்த பரோடா மகாராஜா, "பேராசை, பொறாமை முதலிய துர்க்குணங்களால் பீடிக்கப்பட்டு, தற்காலம் கலங்கி நிற்கும் இவ்வுலகத்தின் நிலைமையைப் பார்க்கும் போது நாம் எடுத்துக் கொண்டிருக்கும் வேலையால் ஏதாவது பயனுண்டாகுமா என்ற சந்தேகம் நமக்குண்டாகிறது. இருப்பினும், உயர்ந்த லட்சியத்துடனும், திடசித்தத்துடனும் நாம் வேலை செய்து வருகிறோம்," என்று தமது சொற்பொழிவில் குறிப்பிட்டிருப்பதை அன்பர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மதங்களின் உண்மையான கொள்கைகளோடு, தற்காலிகமாக சில ஆசாரங்களும் பெரியார்களால் ஏற்படுத்தப் பட்டிருந்தன. அவை பண்டைக்காலத்தில் ஜனங்களிடையே ஒற்றுமையை நிலவச் செய்வதற்கு உதவியாக இருந்தன. தற்காலம், பெரும்பாலான மக்கள் மதக் கொள்கைகளைக் காற்றில் பறக்கவிட்டு, ஆசாரங்களையே பெரிதாகக் கருதி வருகின்றனர். இதனால் ஒரே மதத்தை—அதிலும் முக்கியமாக இந்து மதத்தை—ச் சேர்ந்த மக்களிலேயே இந்த ஆசாரங்கள் காரணமாகப் பல பிரிவுகள் ஏற்படலாயின. ஆசாரத்தில் மிகுந்தவர்கள் தங்களை உயர்ந்தவர்கள் என்றும், தங்களைப் போல் அதை அவ்வளவாகப் பாராட்டாதவர்களைத் தங்களினும் கேவலமானவர்களென்றும் நினைத்துப் பேதம் பாராட்டினர். இப் பேதம் நமது இந்து மதத்தில் பலமாக வேரூன்றி படித்தரத்தில் மக்களைப் பல சாதிகளாகப் பிரித்து விட்டது. இச் சாதிகளிலும், தாழ்த்தப்பட்ட மக்கள் மற்றெல்லா சாதியாராலும் மிகக் கேவலமாகக் கருதப்பட்டு வருகின்றனர். இவர்கள் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களாகவும் மேற்கொண்டவர்களாகவும் இருந்தும், உயர்சாதியினரெனத் தங்களைச் சொல்லிக் கொள்ளும் வைதீக மனப்பான்மை கொண்டவர்கள் இம் மக்களுக்கு, மற்ற சாதியாருக்குக் கொடுக்கும் உரிமைகளில் சிறிது கூட கொடுக்க மனமிசைவதே யில்லை. இச் சநாதன வைதீகப் பெரியார்கள், நீசர்களென்றும், அநாசாரமுடையவர்களென்றும் இவர்

களே இழித்துக் கூறும் கிறிஸ்தவம், முகம்மதியம் முதலிய மதங்களைச் சேர்ந்த மக்களுக்குக் காட்டும் மரியாதையையும், மதிப்பையுங் கூட இத் தாழ்த்தப் பட்ட மக்களிடங் காட்டுவதில்லை. பிறமதஸ்தர்களுக்குச் சமூக சமத்துவ விஷயத்தில் நமது உயர் சாதி மக்கள் அளிக்கும் உரிமை கூட, தங்கள் சொந்த இந்து மதத்தையே சேர்ந்தவர்களான தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அளிக்கவில்லை யென்றால், அது மிகவும் கொடுமையல்லவா ! என்று நாம் கேட்கிறோம். இவ் விஷயத்தை நமது வைதீகப் பெரியார்கள் சிறிது சிந்தித்துப் பார்ப்பார்களானால், தாங்கள் தாழ்த்தப்பட்டார் விஷயத்தில் மிகவும் நியாயமற்ற முறையில் நடந்துகொள்வது நன்கு புலனாகும்.

இந்து மதத்தில் வைதீக மனப்பான்மை கொண்ட ஜாதி இந்துக்கள் செய்துவரும் கொடுமையைச் சகிக்க முடியாமையால்தான் தாழ்த்தப்பட்ட வகுப்பிலிருந்தும் பிற்போக்கான வகுப்புகளிலிருந்தும் பலர் இந்துமதத்தை உதறித்தள்ளிவிட்டு, கிறிஸ்தவ, முகம்மதிய முதலிய மதங்களில் நாள்தோறும் போய்ச் சேர்ந்துகொண்டே வருகின்றனர்.

மதமாற்றத்தால் இந்திய மக்களின் ஜனத்தொகை நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகிறது. இவ்வித இந் நிலைமையை இவ்விதமே நீடிக்கவிட்டிருந்தால் இந்துமதம் இன்னுஞ் சிறிது நாட்களில் இருந்த விடந் தெரியாமல் மறைந்து போய்விடுமோ என்று சந்தேகிக்கவும், அஞ்சவும் வேண்டியிருக்கிறது. வைதீக சநாதனிகளின் பிடிவாத மனப்பான்மையாலேயே இவ்வித நெருக்கடியான நிலைமை இந்து மதத்திற்கு ஏற்பட்டிருக்கிறது. இந்நிலைமை மாறவேண்டுமானால், கால தேச வர்த்தமானங்களை யொட்டி, வைதீகப் பெரியார்கள் தாழ்த்தப்பட்டார் விஷயத்தில் தாராள மனப்பான்மை காட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம். அவ்விதம் அவர்கள் செய்ய முன்வராவிட்டால் டாக்டர் அம்பேத்கார் போன்ற தாழ்த்தப்பட்டார் தலைவர்கள் செய்யும் கிளர்ச்சிக்கு ஆதிக்கத்தையே தரும்.

சில காலமாக, தாழ்த்தப்பட்டார் தலைவரான டாக்டர் அம்பேத்காரும் அவரது கோஷ்டியாரும் தாங்கள இந்து மதத்தைவிட்டு வேறு மதத்துக்கு மாறப்போவதாகச் செய்துவரும் கிளர்ச்சியை வாசக நேயர்கள் அறிந்திருக்கலாம். அவர் சிறந்த போறிஞர். ஆராயல் நிபுணர். அவர் பலமுறை எடுத்துக் கூறி வந்திருப்பதுபோல, சமூகக் கொடுமைக் காளானவர்; பம்பாய் மாகாணத்திலுள்ள ஜாதி இந்துக்களால் துன்புறுத்தப்பட்டவர் என்பதை யாரும் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஆகவே, அவர் தமது வகுப்பினராகிய தாழ்த்தப்பட்டார் இந்து மதத்தி லிருக்கும் வரை அவர்களுக்கு விமோசனங் கிடைக்கப்போவதில்லை யெனக் கூறிவருவதை யாரும் குறைகூறுவதற்கில்லை. ஆயினும், அவர் ஆத்மீக விஷயங்களைச் சிறிதுஞ் சிந்தியாது லௌகீகப் பிரயோசனங்களிலேயே பெரிதுங் கவனஞ் செலுத்தி

வருவதனால்தான், மதமாற்றம் அவசியம் என்று வற்புறுத்தி வருகிறார். ஆத்மார்த்த நன்மையையும் அவர் கருதியிருப்பாரானால், தாமும் தமது வகுப்பாரும் தங்கள் சொந்த மதமாகிய இந்து மதத்திலேயே இருந்து தங்கள் உரிமைகளைப் போராடிப் பெறவேண்டுமென்று புலப்பட்டிருக்கும்.

டாக்டர் அம்பேத்கார் மதமாறப் போவதாகக் கூறினாரோ இல்லையோ, பிற மதஸ்தர்களெல்லாம் "எங்கள் மதத்தில் வந்து சேருங்கள்; எங்கள் மதத்தில் தான் உங்களுக்குச் சமத்துவமும், சகல நன்மைகளும் கிடைக்கும்" என்று ஆசை வார்த்தை கூறி அவர்களை ஆவலுடன் அழைக்க ஆரம்பித்து விட்டார்கள். டாக்டர் அம்பேத்கார் கோஷ்டியார் எந்த மதத்தில் சேர்ந்தால் தங்களுக்கு அந்தஸ்தும் லாபமும் கிடைக்கு மென்று பார்த்து வருகிறார்கள். வைதீக சநாதனிகளுடைய பிடிவாத மனப்பான்மை எவ்வளவு கண்டிக்கத் தக்கதா யிருக்கிறதோ, அது போலவே, இவர்களுடைய இவ் விபரீத மனப்பான்மையும் அழுத்தமாகக் கண்டிக்கத் தகுந்தது. டாக்டர் அம்பேத்கார் மத மாற்றத்தை ஒருவித அரசியல் வியாபாரமாகக் கொண்டு பேரம் பேசி வருகிறார் என்பதற்குச் சமீபகால உதாரண மொன்றை இங்கு எடுத்துக் காட்டுவது அவசியமென நாம் கருதுகிறோம்

டாக்டர் அம்பேத்கார் இந்து மதத்திற்கு எதிராக ஆரம்பித்திருக்கும் பிரசாரத்தைத் தடுக்க வேண்டி, சமீபத்தில் பம்பாயிலுள்ள ஸ்ரீமான் பிர்லா முதலிய பிரமுகர்களும், டாக்டர் அம்பேத்காரும் இந்து மகாசபைத் தலைவரான டாக்டர் மூஞ்சேயை அழைத்து அவரோடு சம்பாஷித்து ஒரு ஒப்பந்தம் தயாரித்திருக்கின்றனர். அப்போது அவ்வொப்பந்த சம்பந்தமாக டாக்டர் அம்பேத்கார் தம் அபிப்பிராயத்தை வெளியிடுகையில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

"......................இஸ்லாம் மதம், கிறிஸ்தவ மதம், சீக்கிய மதம் ஆகிய மூன்றிலொன்றில் சேரலாம். இஸ்லாத்தில் தாழ்ந்த வகுப்பினர் வேண்டுவதெல்லாம் அளிக்கப்படுகின்றன. எல்லா மாகாணங்களிலும் முஸ்லீம்கள் இந்த மாறுதலடையக் கூடியவர்களுக்குப் பாதுகாப்பளிக்கக்கூடும். இஸ்லாத்திடம் பணம் நிறைய இருக்கிறது. அரசியல் தோரணையில் இத்தாழ்ந்த வகுப்பினர் முஸ்லீம்களுக்குள்ள எல்லா உரிமைகளும் பெறுவார்கள். விசேஷப் பிரதிநிதித்துவம், உத்தியோகத்தில் சலுகை முதலியன இவர்களுக்குக் கிடைக்கின்றன. கிறிஸ்துவ மதமும் இதைப்போலவே ஆகர்ஷிக்கக்கூடியதாக இருக்கிறது. இந்திய கிறிஸ்தவர்கள் தொகையில் மிகக் குறைவாக இருப்பினும், தாழ்ந்த வகுப்பினர் கிறிஸ்தவ மதத்தில் சேருவதென்று ஏற்பட்டால், அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய கிறிஸ்தவ தேசங்களிலிருந்து ஏராளமாகப் பணவுதவி கிடைக்கக்கூடும்.........ஆனால் கிறிஸ்தவ மதத்திற்குக் கவர்ன்மெண்டு ஆதரவிருந்துவருகிறது. அரசியல் தோரணையில்

இஸ்லாம்போலவே கிறிஸ்தவ மதமும் தாழ்ந்த வகுப்பினருக்கு உரிமைகளை யளிக்கும். முஸ்லிம்கள் போலவே கிறிஸ்தவருக்கும் தனிப் பிரதிநிதித்துவம் சட்ட சபைகளில் அளிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விரு மதங்களை பார்க்கும்போது சீக்கிய மதத்தில் ஆகர்ஷிக்கக் கூடியது அதிகமொன்றுமில்லை...........ராஜீயத்துறையிலும் மற்ற இரு மதங்களைப்போல இம்மதம் எதுவும் செய்ய முடியாது.........."

இதிலிருந்து டாக்டர் அம்பேத்காருடைய மனோபாவமும், அரசியல் போரும் நன்கு தெரியும். ராவ்பகதூர் எம். ஸி. ராஜா, டாக்டர் அம்பேத்காரது மனோபாவத்தை ஆதியிலிருந்தே, கண்டித்துவருகிறார். இப்போதும் டாக்டர் மூஞ்சே தாங்கள் செய்து வரும் ஒப்பந்தத்தைப் பற்றி இவரது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டதற்குக் கூட ராவ்பகதூர் ராஜா தமது முன்னைய அபிப்பிராயத்தையே வலியுறுத்தி யிருக்கிறார். மேலும் அவர் இந்து மதத்தைக் காப்பதற்காகவே இருப்பதாகக் கூறிக்கொண்டு வரும் இந்து மகாசபைத் தலைவர், தாழ்த்தப்பட்டார்க்கு சமூக சமத்துவமோ, ஆத்மார்த்த சாதனமோ அளிப்பதை விட்டு, அவர்களை மதமாற்றும் தோரணையிலேயே அவர்கள் விஷயத்தைக் கவனிப்பதைப் பற்றிக் கண்டித் திருப்பதோடு, "தாழ்ந்த வகுப்பினரைப் பிரித்து மதரீதியில் சீக்கியருடனும், அரசியல் விஷயங்களில் இந்துக்களுடனும் சேர்க்கப் பார்க்கிறீர்கள். இவை யெல்லாம் தாழ்ந்த வகுப்பினர் நன்மைக் கேற்றவையன்று...............இந்த மாதிரி பேரம் செய்யப்பட நாங்கள் ஆடு மாடுகளல்ல. நாங்கள் ஒரு வகுப்பாக முன்னேற்ற மடைய விரும்புகிறோம். இதை இந்துக்களென்ற பிறப்புரிமையுடன் தான் நாங்கள் சிறப்பாக நடத்த முடியும்.................. இந்த அரசியல் பேரங்களுக் கெல்லாம் நான் உட்பட விரும்பவில்லை." என்று அழுத்தமாகக் கூறியிருக்கிறார். ராவ்பகதூர் ராஜா இந்து மதத்தின்மீது கொண்டுள்ள ஆழ்ந்த பற்றைக் கண்டு நாம் அவரைப் பாராட்டுகிறோம்.

டாக்டர் மூஞ்சே, ராவ்பகதூர் ராஜாவுடைய அபிப்பிராயத்தை அலட்சியப்படுத்தாது கூர்ந்து கவனிக்கவேண்டும். இந்து மகாசபைத் தலைவரென்ற தோரணையில் டாக்டர் மூஞ்சே, மகாத்மா காந்தி ஆரம்பித்து நடத்திவருவதுபோல் தாழ்ந்த வகுப்பினரின் சமூகக் குறைகளை அகற்ற முற்பட வேண்டுகிறோம். நினைத்தபோது போட்டிருக்கும் சட்டையைக் கழற்றி யெறிந்துவிட்டு, வேறு சட்டையை மாட்டிக்கொள்வதுபோல், மதம் சட்டையல்ல என்பதைத் தாழ்த்தப்பட்ட வகுப்பாரும், டாக்டர் அம்பேத்காரும் அறியவேண்டுமென்று நாம் விரும்புகிறோம்.

ஓம் தத் ஸத்.

# சந்தாதாரர்களுக்கு

# அறிவிப்பு.

நமது "ஆனந்த"னின் 22-வது வருடத்துக்குரிய சந்தா தொகையை நாம் குறிப்பிட்டிருந்த காலத்துக்குள் முன்னதாகச் செலுத்திவிட்ட எல்லா நேயர்களுக்கும் நமது மனப் பூர்வமான வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இவ்வன்பர்களுடைய பெயர்கள் முறையே தனிப் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. அடுத்த "ஈஸ்வர" வருஷத்துப் பஞ்சாங்கம் அச்சிடப்பட்டுத் தயாரானதும், முன் கூட்டிச் சந்தாத் தொகையை அனுப்பிய நண்பர்கள் அனைவருக்கும் தவறாது, ஒவ்வொரு பஞ்சாங்கம் அனுப்பப் படும்.

இதையறியாது, சந்தாவை முன்னதாகச் செலுத்திய நேயர்களில் சிலர், 'ஏன் இன்னமும் பஞ்சாங்கம் அனுப்ப வில்லை' என்று கடிதத்தின்மேல் கடிதம் எழுதுகின்றனர். தாது வருஷம் பிறந்து இன்னும் நாலைந்து மாதங்கூட ஆக வில்லை; இதற்குள் எவ்வாறு அடுத்த வருஷத்துப் பஞ்சாங்கம் தயாராய்விடும்? இதை அவசரப்பட்டுக் கடிதம் எழுதும் அன்பர்கள் யோசித்துப் பார்க்கவேண்டும்.

ஈஸ்வர வருஷப் பஞ்சாங்கத்தின் அச்சுவேலை வருகிற தை, மாசி மாதங்களில் ஆரம்பமாகும். அது முடிந்து புத்தக ரூபமாக வந்ததும், சந்தாத் தொகையை முன்னதாகச் செலுத்திய எல்லா நேயர்களுக்கும் அப் பஞ்சாங்கம் தவறாது அனுப்பிவைக்கப்படும் என்று மீண்டுமொருமுறை தெரிவித்துக்கொள்ளுகிறோம். ஆகவே, அன்பர்கள் அதுவரை பொறுத்திருப்பார்களாக!




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(தொகுதி 21, பகுதி 12. 946-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 6. ஆரம்பணாதிகரணம்

14-வது சூத்திரம். அவதாரிகை:—வியாவகாரிகமாகிய போக்தா போக்கியம் என்னும் பேதங்களை யங்கீகரித்து அதனால் உண்டாகும் தோஷங்கள் அலைகடல் முதலிய திருஷ்டாந்தத்தால் முன் சூத்திரத்தில் விளக்கப்பட்டன. இந்த திருஷ்டாந்த பலத்தால் பிரம்ம ஜகத்தாகப் பரிணமித்த தெனவும் அதனால் அதற்கு விகாரத்தன்மை சம்பவித்த தெனவும் மந்தபுத்தி யுடையோர் கருதுவராகலின், முன்னே அங்கீகரிக்கப்பட்ட போக்தா போக்கிய விவாகங்கள் (வேறுபாடுகள்) கற்பிதமே யன்றி பாரமார்த்திக மல்ல வென்று விவர்த்த வாதத்தால் முக்கியாபிப்பிராயம் கூறப்படுகின்றது.

முன் அதிகரணத்திலும் இந்த அதிகரணத்திலும் விஷயம் ஒன்றேயாயினும் வாதங்கள் வெவ்வேறு. முன்பு பரிணாம திருஷ்டாந்தத்தால் பிரம்மம் ஜகத்திற்குப் பரிணாமோபாதான காரண மென்று கூறப்பட்டது. இப்போது அது (பிரம்மம்) ஜகத்திற்கு விவர்த்தோபாதான காரண மென்று கூறப்படுகின்றது.

### சூ. 14. "ததநந்யத்வ மாரம்பண சப்தாதிப்ய:"

பதவுரை:—ததநந்யத்வம்=காரணமாகிய பிரமத்தைக் காட்டிலும் காரியமாகிய ஜகத்திற்கு அபின்னத்துவம் அவகம்யதே=அறியப்படுகின்றது) ஏனெனில், ஆரம்பண சப்தாதிப்ய:=சுருதியிலுள்ள ஆரம்பணம் முதலிய வார்த்தைகளால்.

கருத்து:—காரணமாகிய பிரம்மத்தைக் காட்டிலும் காரியமாகிய போக்தாபோக்கியம் முதலிய பிரபஞ்சக் கூட்டம் அநந்யம் (வேறானதல்ல) என்று சுருதியால் அறியப்படுகின்றது. அநந்யத்துவ மென்றால்; காரணத்தினும் காரியத்திற்கு வேறான இருப்பு இல்லாமற் போதலேயன்றி அவிபாக (பிரிக்கப்படக் கூடாத) நிலையை அடைவதன்று. முந்திய சூத்திரத்தில் காரியத்திற்குக் காரணத்தை விட வேறான இருப்பு அலைகடல் திருஷ்டாந்தத்தால் வியவகார தசையில் அங்கீகரிக்கப்பட்டுப் பின்பு அவற்றிற்கு அவிபாகம்

(வேறல்ல என்பது) கூறப்பட்டது. அத்தகைய வேறுபட்ட நிலை காரியத்திற்கு பாரமார்த்திகமாக (உண்மையாக) எக்காலத்தும் இல்லை யென்று இங்கு நிஷேதிக்கப்பட்டு (விலக்கப்பட்டு) காரிய காரணங்களுக்கு அன்னியத் தன்மை நிரூபிக்கப் படுகின்றது. ஆதலால் பரிணாம வாதத்தில் பிரம்ம காரண வாதிகளுக்கு நேரிடும் தோஷங்கள் விவர்த்த வாதத்தில் போக்கப்படுகின்றன.

காரியம் காரணத்தினும் வேறன்று:—(சுருதியில் கூறப்பட்டுள்ள விஷய வாக்கியம் அதற்குத் திருஷ்டாந்த வாக்கியம் என்பவற்றின் பொருள் கீழே காட்டப்படுகின்றது.)

விஷய வாக்கியத்தின் பொருள்: "எந்த உபதேசத்தால் கேட்கப் படாதது கேட்கப் பட்டதாகுமோ, அறியப்படாதது அறியப்பட்டதாகுமோ நிச்சயிக்கப்படாதது நிச்சயிக்கப்பட்டதாகுமோ அந்த உபதேசத்தை உன் குருவைக் கேட்டாயா?

திருஷ்டாந்த வாக்கியத்தின் பொருள்:—பிரியதரிசனனாகிய ஓ சுவேதகேதுவே! ஒரு விஞ்ஞானத்தால் சர்வ விஞ்ஞானமும் எப்படித் தெரியும்? என்றால் ஒரு மண்ணுருண்டையின் ஞானத்தால் அதன் காரியங்களாகிய குடம் சட்டி முதலிய யாவும் மண்ணின் விகாரமே என்று தெரிகின்றது. (அதாவது: மண் தன்மையால் மண்ணினும் வேறுபட்டவை யல்ல வென்பது தெரிகின்றது.) குடத்தின் ஒடுங்கிய கழுத்து முதலிய வடிவங்களும் குடம் முதலிய பெயர்களும் சொல்மாத்திரமே யன்றி சத்தியமல்ல. அதன் காரணமாகிய மண் மாத்திரமே சத்தியம்." எனவே குடம் முதலியவற்றின் வஸ்து தத்துவம் மண்ணேயன்றி வேறல்ல. இப்படியே திருஷ்டாந்தத்திலும் பிரம்மத்தினும் வேறாக காரியத்திற்கு இருப்பில்லை என்று சுருதி வாக்கியங்கள் தெரிவிக்கின்றன.

"திருசியங்கள் (பார்க்கப் படுபவை) எல்லாம் பிரம்மத்தினும் வேறுபடாதவை யாயின், சுருதியில் சொல்லப்பட்டது போல் ஒரு விஞ்ஞானத்தால் சர்வ விஞ்ஞானமும் எப்படி யுண்டாகும்?" என்று இங்கு ஓர் ஆக்ஷேபம் தோன்றலாம். இதற்குச் சமாதானம் இதுவாம்.

"மகா காசத்தை விட கடாசாகம் எப்படி அனன்னியமோ, மணற் பூமியினும் கானற்சலம் எப்படி அனன்னியமோ, இப்பியினும் வெள்ளி எப்படி அனன்னியமோ, கயிற்றினும் பாம்பு எப்படி அனன்னியமோ அப்படியே பிரம்மத்தினும் போக்தா போக்கியம் முதலிய பிரபஞ்சமும் அனன்னியமாம். அதாவது பிரம்மத்தினும் வேறாக சத்தியமான இருப்புடையதல்ல. ஆகையால் திருஷ்டமானவுடனே நஷ்ட சொரூப முடையதாகின்றது.

(இவ்வாறு சுத்தாத்வைதம் ஸ்தாபிக்கப்பட்டது. இனி இச்சூத்திரத்தின் பலத்தைக் கொண்டே பேதாபேத மதம் (சித்து அசித்து ஈசுவரன் மூன்பவைகளுக்கு காரியாவஸ்தையில் பேதத்தையும் காரணாவஸ்தையில் அபேதத்தையும் கூறும் மதம். அதாவது விசிஷ்டாத்வைத மதம்) கண்டிக்கப்படுகின்றது).

அவர்கள் மதக்கொள்கை இதுவாம்:—"சமுத்திர வடிவத் தன்மையால் ஏகத்தன்மையும் அலைநுரைகளின் வடிவத்தன்மையால் நாநாத்துவமும் எப்படி காணப்படுகின்றனவோ; மண்வடிவத் தன்மையால் ஏகத்தன்மையும் குடம் சட்டிபானை முதலிய வடிவங்களின் தன்மையால் நாநாத்துவமும் எப்படிக் காணப்படுகின்றனவோ அப்படியே அநேக சக்திப் பிரவிருத்திகளை யுடைய பிரம்மத்தினிடத்தும் அவஸ்தாபேதத்தால் ஏகத்துவமும் நாநாத்துவமும் ஆகிய இரு தன்மைகளும் தோன்றலாம். மேலும் சிருஷ்டிக்கு முன்பு அந்தப் பிரம்மம் நாமரூப வேறுபாடுகளுக்குத் தகுதியற்ற சிதசித்வஸ்து பேதத்தோடு கூடியதாய் ஏகத்தன்மையைப் பொருந்தி யிருக்கின்றது. சிருஷ்டிக்குப் பிறகு அது ஸ்தூலசிதசித் விசிஷ்டமாய் (கூடியதாய்) நாநாத்துவத்தை யடைகின்றது. மேலும் ஏகத்துவ அம்சத்தால் ஞானத்தால் மோக்ஷ வியவகாரமும் நாநாத்துவ அம்சத்தால் கர்மகாண்ட ஆசிரியமாகிய வைதிக லௌகிக வியவகாரமும் சித்திக்கின்றன. மேலே கூறப்பட்ட மண் முதலிய பரிணாமதிருஷ்டாந்தங்கள் தங்கள் வாதத்திற்குப் பொருந்துவ தாகவே யிருக்கின்றன" என்பது இவர்களது மதம்.

இந்த வாதம் யுக்தமன்று. ஏனெனில்:—திருஷ்டாந்த சுருதி வாக்கியத்தில் (இதன் பொருள் மேலே காட்டப்பட்டது) பிரகிருதிக்கு மாத்திரம் சத்தியத்துவமும் அதன் விகாரங்களுக்கு அநித்தியத்தன்மையும் விவகாரத்திற்கு இருப்பு நிஷேதிப்பதின் வாயிலாக பரிணாமவாதம் சுருதி விரோதமானதென்றும் விவர்த்தவாதமே சுருதி சம்மதமானதென்றும் சொல்லப்பட்டன.

(பரிணாமவாத விவர்த்தவாதங்கள் முந்திய சஞ்சிகையில் விளக்கப்பட்டன. பரிணாமமாவது:—உபாதானத்தோடு சமமான சத்தையுடையது. இந்த வாதத்தில் காரிய காரணங்களிரண்டும் சத்தியமே. காரணம் காரணத்தினால் லீனமானாலும் வேறுபட்ட சத்தையாய் அவிபாக தசையைப் பொருந்தி யிருக்கும்.

விவர்த்தமாவது:—உபாதானத்திற்கு விஷமமான (வேறுபட்ட) சத்தையை யுடையது. இந்த வாதத்தில் காரியத்திற்கு எக்காலத்தும் சத்தியத் தன்மை இல்லை.)

இவ்வாறே தார்ஷ்டாந்தத்திலும் "ஐததாத்ம்ய ஸர்வம்", "தத்ஸத்யம்" என்பன போன்ற வாக்கியங்களால் பரம காரணமாகிய பிரம்மம் மாத்திரம் மிதம சத்தியம் என்றும் "ஸ ஆத்மா தத்வமஸி ச்வேதகேதோ" என்னும் வாக்கியத்தினால் ஜீவனுக்கு பிரம்மபாவம் உண்டென்றும் போதிக்கப்பட்டது. ஆப்த வாக்கியத்தினால் உண்டாகும் ரஜ்ஜு (கயிறு) முதலியவற்றின் ஞானம் சர்ப்பம் முதலியவற்றின் ஞானத்தைப் பாதிப்பதுபோலவே "தத்வமஸி" முதலிய உபதேசத்தினால் உண்டாகும் ஜீவப் பிரம்மைக்கிய ஞானமும் அவித்தையாலுண்டாகும் ஜீவ ஞானத்தைப் பாதிக்கின்றது. அதனால் ஜீவனையாசிரயித்துள்ள எல்லா லோக வியவகாரமும் பாதிக்கப்படுகின்றது. இங்ஙனமாதலால் வியவகார சித்திக்காக பிரம்மத்தினிடத்து கற்பிக்கப்பட்ட நாநாத்துவ அம்சமும் பாதமடைகின்றது. இவ்வாறு கர்த்தாகர்மபல வியவகார அபாவத்தைச் சுருதி சாற்றுகின்றது. இத்தகைய எல்லா விவகாரங்களின் அபாவமும் (அபாவம்=இன்மை) மோக்ஷாவஸ்தைகளில் மாத்திரமல்லாமல் சர்வாவஸ்தை

களிலும் சத்தியமாமென்று 'தத்துவமஸி', 'பிரஹ்மை வேதம் ஸர்வம்', "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" முதலிய வாக்கியங்கள் தெரிவிக்கின்றன.

இனி, இது விஷயமாக மற்றொரு ஆக்ஷேபம். அது யாதெனில்:—"மேலே கூறியவாறு ஏகத்தன்மையை அங்கீகரிப்பதால் நாநாத்தன்மை இல்லாமற் போவதோடு உலக வியவகாரங்களெல்லாம் இல்லையாகும். அதனால் பேதத்தை அபேக்ஷித்துக் கூறப்பட்டுள்ள விதிநிஷேத சாஸ்திரங்கள் பிரயோஜன மற்றவையாகும். குரு சிஷ்ய பேதத்தைக்கோரும் மோக்ஷ சாஸ்திரமும் நிஷ்பிரயோஜனமாகும்; பொய்யான மோக்ஷ சாஸ்திரத்தால் போதிக்கப் கப்பட்ட ஆத்மை கத்துவத்திற்கு சத்தியம் சித்திக்காமற்போகும்" என்பதாம். இதற்குச் சமாதானம் இதுவாம்:—

நித்திரை செய்வோனுக்கு சொப்பன காலத்தில் காணப்படும் பொருள்களைக் குறித்து நிச்சயமானவை என்னும் ஞானம் இருக்கிறதேயன்றி பொய்த்தோற்றம் என்னும் எண்ணம் இருப்பதில்லை. எனவே, விழிப்பதற்கு முன்பு வஸ்துக்களுக்கு சத்தியத்துவ வியவகாரமே இருக்கின்றது. அப்படியே பிரம்மாத்ம ஐக்கிய விஞ்ஞானம் உண்டாவதற்கு முன்பு வியவகாரங்களின் அடைவும் உண்டாகின்றது. அதுவரையிலும் 'நான்' 'எனது' முதலிய அவித்தியா சம்பந்த உலக விவகாரங்களும், கர்த்துருகர்ம பலாபேக்ஷை யுடைய எல்லா சாஸ்திர விவகாரமும் சத்தியமாம், அசத்தியமாகிய சொப்பன தார்த்தங்கள் சத்தியமாகிய ஸ்மிருதிக்கு நினைப்பிற்கு) எப்படி காரணங்களாகின்றனவோ, அசத்தியமாகிய கயிற்றரவு சத்தியமாகிய பயநடுக்கங்களை எப்படி உண்டாக்குகின்றனவோ அப்படியே அசத்தியமாகிய மோட்ச சாஸ்திரங்களும் சத்தியமாகிய ஆத்மைகத்வ ஞானத்திற்குக் காரணமாகின்றது. ஆகையால் மேற் காட்டிய தோஷங்கள் அத்வைத மதத்தில் உண்டாக மாட்டா.

15-வது சூத்திரம் அவதாரிகை:—காரணத்தினும் காரியம் வேறன்று என்னும் வாததால் உளதாகும் பிரத்தியக்ஷாதி விரோதங்களைப் போக்கி மீண்டும் அனுமானத்தால் அந்த வாதமே ஸ்தாபிக்கப் படுகின்றது.

சூ. 15. பாவே சோபலப்தே:

பதவுரை:—பாவே=காரணத்தின் பாவத்தால் உபலப் தேச்ச=காரியத்தின் அடைவு இருத்தலாலும் (அனன்னியத் தன்மை ஏற்படுகின்றது.)

(மற்றொரு பொருள்)

பாவேச=காரணத்தின் பாவத்திலும், உபலப்தே:=காரணத்தின் பிரத்தியக்ஷத்தினின்றும் (காரியத்தின் பாவமும் பிரத்தியக்ஷமும் உண்டாவதால் அவற்றின் அனன்னியத் தன்மை ஏற்படுகின்றது.)

கருத்து:—காரண பாவத்தினிடத்தில் காரியத்தினடைவு உண்டாதலால் அவை அனன்னியமென்று சொல்லப்படத்தக்கதா யிருக்கின்றன.

(இரண்டாவது அர்த்தம்) காரணத்தை விட்டு காரியத்திற்கு பின்னமான இருப்பும் பிரத்தியக்ஷமும் இல்லாமற் போதலால் அவை அனன்னியமென்று நிச்சயிக்கப்படுகின்றது.

மண் குடங்களிலும், நூல் ஆடைகளிலும் காணப்படுவதுபோல காரண சத்தியங்களினடைவு இல்லாமலே காரிய சத்தியங்களினடைவு சம்பவித்த லில்லை யாதலால், காரிய காரணங்கள் அனன்னியங்களாகும். மயக்க வுணர் வால் தோன்றும் பாம்பு அதற்கு ஆதாரமாகிய கயிற்றைத் தவிர இல்லாதது போலவே பிரமத்தினிடத்துத் தோன்றும் இந்தப் பிரபஞ்சமும் பிரம்மத்தி னும் பின்னமாக இல்லை.

எங்கெங்கு குடமிருக்கின்றதோ அங்கங்கு மண் பாவங்களின் அடைவு கள் இருக்கின்றன. இப்படியே எங்கெங்கு ஜகத்து இருக்கின்றதோ அங் கங்கு பிரம்மபாவ அடைவுகள் இருக்கின்றன. ஆகையால் ஜகத்து பிரம்மத் தினும் அனன்னியமாக இருக்கின்றதென்று அனுமானத்தால் சாதிக்கப்பட் டது.

(மற்றொரு பொருள்.)

பிரத்தியக்ஷ பிரமாணத்தாலும் காரிய காரணங்களுக்கு அனன்னியத் துவம் போதிக்கப்படுகின்றது. குறுக்கும் நெடுக்குமாகவுள்ள நூலிழைகளே ஆடையாக பிரத்தியக்ஷமாகின்றன. நூலினும் வேறாக ஆடை பிரத்தியக்ஷ மாவதில்லை. இவ்வாறு காரியத்தினிடத்து காரணத்தின் அடைவு இருத்த லால் காரியமானது காரணத்தினும் வேறான இருப்புடைய வஸ்துவல்ல என் பது விளங்குகின்றது. ஆகலின் பிரபஞ்சம் பிரபஞ்சானனன்னியம்.

---

## சிலோன் தமிழர் நன்கொடை.

நமது "ஆனந்தன்" தாய்மொழியாகிய தமிழுக்கும், இந்து மதத்துக்குஞ் செய்துவரும் சேவையைப் பாராட்டி, இலங்கை (சிலோன்) யில் மாத்தளை என்னுமிடத்தில் வாழ்ந்துவரும் திரு. எ. சிவஸ்வாமி ஐயர் மனமுவந்து ஒரு ரூபாயை நன்கொடையாக அனுப்பியிருக்கிறார். வெளிநாட்டில் சென்று வாழ்ந்தும் தாய்நாட் டையும் தாய்மொழியையும் மறவாத கொடையாளியான ஐயரவர் கள் இறைவனருளால் எல்லா நலன்களும் பெற்று வாழவேண்டு மென்று பிரார்த்திக்கிறோம்.

பத்திராதிபர்.

# கண்ணன் திருவிளையாடல் தத்துவம்

(வைரபுரம் R ஷண்முகம் பிள்ளை)

ஒரு நாள் ஆய்ப்பாடியிலுள்ள கோபிகாஸ்திரீகள் ஒரு வாவியை யடைந்து தங்கள் ஆடைகளை யகற்றிக் கரையின் மீது வைத்து நீராடப்புக்கனர். அப்போழ்து அவ்வழி வந்த கண்ணன் அம்மாதர்களறியா வண்ணம் அவர்களாடைகளனைத்தையுங் கவர்ந்து சென்று ஆங்குள்ள புன்னை மரத்தின் மீதேறி வேணுகானஞ் செய்தனன். வேய்ங்குழலின் இனிய ஓசையைக் கேள்வியுற்ற கோபிகா ஸ்திரீகள் திடுக்கிட்டுக் கண்ணன் வருகிறானென்றஞ்சி ஆடைகளை யுடுத்த எண்ணினர். கரையின்மீது ஆடைகள் காணப்படவில்லை மரத்தின் மீது கண்ணன் அவைகளைக் கவர்ந்து வைத்திருப்பதைக் கண்ணுற்றனர். பெரிதும் நாணமுற்றுத் தங்கள் அவயவங்களை மறைத்தவண்ணம் தங்கள் ஆடைகளைக் கொடுக்குமாறு கண்ணனை இரந்து நின்றனர். இதை யறிந்த கண்ணன் அம்மாதர்கள் தங்கள் அவயவங்களை மறைக்காதிருந்தால் ஆடைகளைக் கொடுப்பதாகக் கூறினான் என்பது பாகவதக் கதை.

கண்ணன் சகல பாசங்களையுங் கடந்த கடவுளம்சமென்பது வெளிப்படை. இத்தகைய கடவுளாகிய கண்ணன் கேவலம் பெண்களின் அவயவங்களை நோக்க விழைவனோ? கடவுளம்சம் மானுட வடிவத்தோடு பொருந்தியதால் இச்செயலுக்கு உடன்படலாம் எனினும் அஃது பொருந்தாதென்க. அத்தகையோர் உள்ளமும் நற்செயலில் ஊக்குமே யன்றித் தீச் செயல்களுக்கு உடன்படுவதின்று. ஆகவே இக்கதையின் அந்தரார்த்தம் இன்னதென்பது குறித்து ஈண்டுச் சிறிது கவனிப்பாம்.

புன்னை மரமாகிய பரமபதத்திலிருந்துகொண்டு கண்ணனாகிய இறைவன் கோபிகைகளான சீடர்களின் ஆடைகளாகிய பாசபந்தங்களைக் கவர்ந்து சாயுஜ்ய பதவியடைய வருமின்! வருமின்!! என்று வேணுகானமாகிய குரலால் அழைத்தான். இதை யுணர்ந்த கோபிகைகளான சீவர்கள் அவயவங்களை மறைத்தலாகிய தேகாபிமானத்தைக்கொண்டு இறைவனை வேண்டினர். இஃதுணர்ந்த கண்ணனாகிய கடவுள் தேகாபிமானம் நீங்கப் பெற்றார்க்கே முத்திவீடு சித்திக்கும் என்பதறிவுறுத்த அவயவங்களை மறைத்தலாகிய தேகாபிமானத்தை நீக்கிய விடத்துத்தானருள் கூர்ந்து ஆடையை வேண்டுதலாகிய இட்ட சித்தியைக் கொடுப்பதாகக் கூறினான்.

எனவே, இறைவன் ஒவ்வொரு ஜீவாத்மாக்களும் உய்ய வேண்டி அவர்கள் பாச பந்தங்களை நீக்கிச் சாயுஜ்ய பதவியளிக்க விரும்புகிறான் என்றும், அச்சீவர்கள் தேகாபிமான மொழிந்து தன்னை நினைத்தவிடத்தே எந்நாளும் இடையறாத இன்பப் பேற்றினையடைய அருள் செய்கிறான் என்றும் உணர்த்துகிறது.

# வருக! ஆனந்தனே வருக!!



(மூவாய் சைவப் பிரகாச வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர் பண்டிதர் திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள் பாடியது.)

நிலைமண்டில ஆசிரியப்பா.

வருக ஆனந்த! வருக ஆனந்த!
திருநிறை செல்வ! திங்களொடு வருக!
அன்பும் அருளும் மண்பதைக் குணர்த்தி
இன்பம் ஊட்டித் துன்பம் நீக்கும்
மன்னே வருக! மணியே வருக!

இல்லார் உள்ளார் நல்லார் பொல்லார்
எல்லார் உளத்தும் நல்லிடம் பெற்றுப்
பல்லிசை பெருக்கிப் பாரெலாம் பரப்பும்
செல்வ வருக! சீரோ வருக!
ஆதியாய் அந்தமாய் அங்கிங் கெங்கும்

சோதியாய்ச் சுடராய்ச் சூழ்ந்து நிற்கும்
மாதொரு பாகனை மனங்கொள் மின்னெனப்
போதிக்கும் ஒருவ! பொற்புடன் வருக!
வேண்டினர் வேண்டிய வேண்டியாங் களிக்கும்
கண்ணுதல் போல மண்ணக மாந்தர்

வேண்டிய பகுதிகள் விருப்புடன் அளிக்கும்
ஆண்டகை வருக! ஆனந்த வருக!
மறைநவில் முறையெலாம் மாந்தர்க் குணர்த்தி
மறைநெறி சிறத்தும் அறைபுகழ் மிக்க
குருவே வருக! திருவே வருக!

அயற்சி யின்றியெம் உயர்ச்சி கருதி
முயற்சி செய்யும் முதல்வ வருக!
அல்லும் பகலும் நல்லும் வகையால்
பல்லிசைத் தமிழும் நல்லியற் சைவமும்
நல்லாய் ஓங்க நற்றொண்டு உஞற்றும்

நல்லோய் வருக! நாயக வருக!
இருணிற முந்நீர் வளைஇய நானிலத்து
பொருவறு மூவேழ் இருமிது யாண்டுகள்
திருத்தொண் டாற்றிய திறமது வியந்து
அருத்தி யொடுன்னை வருக வென்றே

அன்பர் அழைக்கும் அழைப்பொலி வான்புக
திருமுனி சுவாமி பெருமுயற் சியதனால்
இன்புடன் வருக இசையுடன் வருக!
பங்கயச் செல்வியேத்து மங்கையர்க் காசிதன்
பங்கனது அருளொடு எங்கும் வருக! 35.

என்றே,
நாவியன் மருங்கின் கனிபல கூறி
அழைக்குதும் மகிழ்ந்தே! அழைக்குதும் மகிழ்ந்தே!

---

# ஆனந்தனுக்கு வாழ்த்து



(எஸ். கே. சுப்பிரமணிய ஐயர்)

எனது அன்பெனு உருவெடுத்த ஆனந்தரே!

மயான் உமது பெருமையைக் கண்டு உமக்காக எனது மனம், வாக்கு, காயம் இம் மூன்றையும் தத்தம் செய்வதாகக் கருதி அவ்வண்ணம் செய்ய முயற்சியுடன் எழுந்துள்ளேன். தவிரவும் 22-வது ஆண்டுமுதல் மேன்மேலும் ஓங்கி வளர்ந்து வருவீர் என்றும் அதற்கு வேண்டிய அருள் கடவுள் அளிப்பாரென்றும், அச்சமயம் யானும் ஓர் புறம் வீற்றிருக்கலாம் என்றும் திண்ணமாய்க் கருதுகின்றேன்.

இன்னுமோர் உவப்பு என்பால் உண்டாயிற்று. யாதெனில் நீவிர், இவ்வாண்டுச் சந்தாத் தொகையை குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்பிய எம்போன்றவர்களுக்கு ஓர் ஈசுவரனை (ஈசுவர வருடப் பஞ்சாங்கம்)யே இனமாக அளிப்பீர் என்றால் ஏன் உவகை பூக்காது? பூக்கத்தான் செய்யும். ஈசுவரனே என்னை வந்தடைந்தால் (நமக்கு எம்பால் எழுந்துள்ள கருணையை என்னென்பேன்) ஏன் உவகை அடையமாட்டேன்? அவ்வுவகையை ஆதிசேடனாலும் உரைத்தற்குச் சாலாது அவ்வண்ணம் அருளாகிய ஈசுவரனை அளிக்க மனம் எழுந்ததுபற்றி கடவுளைத் தியானித்து நன்றி புரிகிறேன். உமது ஆசிரியரும், உம்மைக் காக்கும் மானேஜர் அவர்களும், நீண்ட ஆயுளும், அஷ்ட ஐசுவரியங்களும் தேக திடகாத்திரமும் பெற்று வாழும்படி யான் ஈசனைத் துதிக்கின்றேன்.

---

# ஆபுத்திரன் வரலாறு

(பெ. ராமாநுஜம்.)

## 1. பசுவும் சிசுவும்

பல்லாண்டுகட்கு முன்னே நமது இந்தியநாட்டின் தென்பாகம் சேர சோழ பாண்டியர் என்ற மூன்றுகுல அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. அந்த மூன்று அரசர்களால் ஆளப்பட்ட நாடு முறையே சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்று பெயர் பெறும். பாண்டியநாடு வைகை பொருநை முதலிய நதிகளால் நீர்வளமும், சுருளி பொதியம் முதலிய மலைகளால் மலைவளமும், கிழக்கும் தெற்கும் கடலைத் தனக்கு எல்லையாகப் பெற்றிருத்தலால் கடல்வளமும் உடையது. இங்ஙனம் கடல் மலை நதி இவற்றால் சிறப்பு மிக்க நாட்டை ஆண்டுவந்த பாண்டியமன்னர்க்கு மதுரை கொற்கை முதலிய நகரங்கள் தலைமை நகரங்களாக இருந்தன. கொற்கையென்னும் பட்டினம் கன்னியாகுமரிக்கு வடகிழக்கே பொருநையாறு கடலோடு கலக்கும் இடத்திருந்தது.

இங்ஙனம் பழந் தமிழ்ப் பாண்டிய மன்னர்க்குத் தலைமை நகரமாக விளங்கிய கொற்கை நகருக்குத் தெற்கே ஒரு காவத தூரத்தில் இடையர் சேரியொன் றிருந்தது. அவ்வூரைச் சுற்றிலும் "கொழு கொழு" என வளர்ந்த பசும்புற் றரைகளும், வானுற வளர்ந்த மரங்கள் அடர்ந்த தோப்புகளும் இருந்தன. பச்சைப்பட்டு போலக் காட்சிதரும் பசும்புல்லை பசுக்களும் கன்றுகளும் நிரை நிரையாக நின்று மேய்வதும், கன்றுகள் துள்ளிக்குதித்து இங்கும் அங்குமாக ஓடுவதும் மாடு மேய்க்கும் சிறுவர்கள் மரநிழலில் உட்கார்ந்து கதை பல பேசுவதும், ஓடி ஆடித் திரிவதும் அழகிய காட்சியாகும். நீலவானத்தில் வெண்கோடு கிழித்தாற்போல அப் பசும்புல் தரையின் இடையே பொருநை யாற்றினின்றும் பிரிந்த கால்வாய் ஒன்று செல்கிறது. அதன் தெளிந்த நீர் கூழாங்கற்களில் பட்டு "சல சல" என்ற சிற்றொலியெழுப்பிச் சென்றுகொண் டிருந்தது. அச் சிற்றூர் மக்கள் களங்கமற்ற நெஞ்சினராய், மகிழ்ச்சி நிறைந்த முகத்தினராய்ச் சிறிதும் சோம்பலின்றித் தத்தம் தொழில்களைச் செய்து கொண்டிருந்தனர். அச் சிற்றூருக்குச் சமீபத்தில் மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்த தோப்பு ஒன்று உளது.

ஒருநாள் பகல் பதினைந்து நாழிகை இருக்கும். கதிரவன் ஆகாயத்தில் தலைக்கு மேலே நின்று தனது கொடிய கதிர்களைப் பரப்பிக்கொண்டிருக்கிறான். வானத்தில் மாசு மறுவில்லை; மேகசஞ்சாரமே கிடையாது. ஒரே நீலநிறம். மாடுகள் அந்தக் கொடிய வெயிலைத் தாங்க மாட்டாமல் அத் தோப்பில் வந்து வரிசை வரிசையாகப் படுத்து அசை போட்டுக்கொண்டிருந்தன. கன்றுகள் தம் நீண்ட அழகிய முகத்தை தத்தம் தாயின்மீது சார்த்தியவண்ணம் கண்களை மூடி உறங்கிக்கொண் டிருந்தன. மாடு மேய்க்கும் சிறுவர்கள்கூட தத்தம் கதைகளையும் ஆட்டபாட்டங்களையும் நிறுத்தி, மேல் துணிகளை தரையில் பரப்பிப் படுத்து உறங்கினர். பறவைகள் ஓய்ந்து

போன குரலில் கத்துவது செவிக்கு மிக்க இன்பந்தருவதா யிருந்தது. காக்கையின் கத்தல்கூட அப்பொழுது எவ்வளவோ இன்பம் பயப்பதா யிருந்தது. கதிரவன் உச்சியி லிருந்த அந்நேரம் மக்கள் நடமாட்டமும் பெருமுழக்கமும் அடங்கிய இரவுபோலக் காட்சி தந்தது. பறவைகளின் ஓய்ந்த குரலும், ஆற்றுநீர் கற்களில் மோதுவதால் எழும் "சல சல" என்ற சிற்றொலியுமன்றி வேறு ஒலியில்லை. அப்பொழுது அத் தோப்பின் ஒரு பக்கத்தில் மிக மெல்லிய குரலில் ஓர் அழுகையொலி கேட்டது. பசுக்கள் எல்லாம் அயர்ந்து படுத்திருக்கையில் ஒரு பசு மட்டும் அத் தோப்பில் இங்கும் அங்குமாக அலைந்து கொண்டிருந்தது. பசுவின் பரபரப்புக்கும் அவ்வழுகைக் குரலுக்கும் நமக்கு ஒன்றும் தொடர்பு விளங்கவில்லை. பறவைகட்கும் விலங்குகட்கும் அறிவில்லையென்று கருதுகிறோம்; ஆனால் ஆண்டவன் திருவருட் குறிப்பை நம்மால் எங்ஙனம் அறிதல் கூடும்? அப் பசு தன் செவிகளை விரித்து அலைவதைக் காணின் அவ்வழுகை யொலிவரும் இடத்தை யறிந்து அடைவதற்காகத்தான் முயல்கிறதோ என்று நாம் ஊகிக்கக்கூடும். உண்மையும் அதுதான். பலவிடத்தும் அலைந்து திரிந்த அப்பசு இறுதியாக அத் தோப்பின் ஓர் பக்கத்துள்ள செடிகொடிகள் ஒன்றோடொன்று பின்னி ஒரு பெரிய குடிசையைப்போலக் காட்சிதந்த ஓர் புதரை யடைந்தது. அப் புதருள் ஓர் யானை நுழைந்திருப்பினும் பிறரால் காண முடியாது. கேட்போர் நெஞ்சைக் கனிவிக்கும் அம்மெல்லிய அழுகைக்குரல் அப் புதருளிருந்தே வந்து கொண்டிருந்தது. பசு அப் புதருள் நுழைய நான்கு புறமும் சுற்றிச் சுற்றி வந்தும் வழி காணாது, தன் கொம்புகளால் கொடிகளை விலக்கி உள்ளே நுழைந்தது. ஆ! என்ன வியப்பு! நீலக்கடலில் செந்நிறக்கதிர் விரித்துத் தோன்றும் இளஞ் சூரியனைப்போல, பகலிலும் இருள் தரும் அப் பசுமைப் புதருள், பசும்புல் தரைமேல் படுத்திருந்த ஓர் அழகிய சிறு ஆண் மகவு பசியால் கதறிக் கொண்டிருந்தது. அம்மகவு அப்பொழுதுதான் பிறந்த குழந்தையோ என்ற ஐயுறக்கூடிய நிலைமையில் இருந்தது. அன்பு கனிந்த நெஞ்சால் தூண்டப்பெற்று, அவ்விரக்கமான குரல் வரும் திசையை அறிந்து அவண் அடைந்த அத் தெய்வப்பசு அம் மகவின் அருகில் அமர்ந்து தீஞ்சுவைப்பால் ஊட்டிற்று. பசுவின் பாலமுதைப் பருகிய அம்மகவு பசியொழிந்து, தனது கைகளையும் கால்களையும் அசைத்துப் புன்சிரிப்புக் காட்டியது. பசு அக் குழந்தையைத் தனது நாவால் மெதுவாகத் தடவியும், உச்சி மோந்தும் தனது கரையற்ற அன்புப்பெருக்கை வெளியிட்டது. எனினும் அச் சிறுமகவு ஒரொரு சமயத்து வாய்விட்டுக் கதறும். பசு அக் குழவியின் அழுகையை மாற்ற வழியறியாது திகைப்புற்று வருந்தும். "எறும்போ யாதோ கடித்ததனால் இங்ஙனம் அழுகிறதுபோலும்" என்று கருதித் தரையையும் செடிகொடிகளையும் உற்றுப்பார்க்கும். தரையில் ஓர் புழு ஊர்ந்து கொண்டிருப்பதைக் கண்டால்; உடனே அதைத் தன் கால் குளம்பால் தேய்த்துக் கொன்று விடும். இறந்த புழுவை இழுத்துச் செல்வதற்கு எறும்புகள் கூட்டங் கூட்டமாய் வந்து சேரும். அவற்றைக் கண்டதும் தனது வாலை வீசி யடித்து அவை யனைத்தையும் நாசமாக்கி விடும். செடியில் ஓணான் முதலியவற்றைக் கண்டுவிட்டால் தனது தலையைச் சாய்த்துக் கொம்புகளை அதற்கு நேராக நீட்டிச் சீறும். அச் சீறலைக்கேட்ட அளவில் அவைகள் ஓடி மறைந்து விடும். இங்ஙனம் ஈ எறும்பு அணுகாதவாறு கண்ணுங் கருத்துமாய் அக் குழந்தையைக் காத்திருந்தது. மாங்களிலும் செடி

கொடிகளிலும் புள்ளினங்கள் கூட்டங் கூட்டமாயமர்ந்து இனியகுரலில் பாடு வது அம்மகவு அயர்ந்து உறங்குவதற்கு ஏதுவா யிருந்தது. நெஞ்சை யுருக் கும் தீங்குரல் வாய்ந்த குயில் கூவும் பொழுதெல்லாம் "அந்தோ. இச் சிசுவை ஆதரிப்பார் எவரும் இலரோ !" என்று அழைப்பதைப்போல் இருக்கும்.

மாலைக் கதிரவன் மரங்களிலும், செடிகளிலும், பசும்புல் தரையிலும் தனது பொன்னிறக் கதிர்களை வீசிக் கொண்டிருந்தான். பொருநையாற் றின் நீர் பொன்தகடுபோல் விளங்கிற்று. காக்கைகள் அத் தெளிந்த நீரிற் குளித்துச் சிறகுலர்த்தி, "இறைவனே, ஆதரவில்லாத அக் குழவியைக் காத் தருள்" என்பனபோல் "கா கா" என்று கத்திக்கொண்டு சென்றன. மாடு மேய்க்கும் சிறுவர்கள் பசுக்களை தத் தம் இல்லிற்கு உரப்பிச் சென்றனர். அவைகள் வரிசை வரிசையாக அசைந்து சென்றன. அவற்றின் கழுத்திற் கட்டிய மணிகள் அமர்ந்த ஒலியை யெழுப்பின. அக் குழந்தையைக் காத் திருந்த பசு அம் மகவினைத் தனியேவிட்டுச் செல்ல மனம் வராது அங்கேயே இருந்தது. பசுக் கூட்டத்தினின்றும் இவ்வொரு பசு தனியே பிரிந்து சென்றதை மாடுமேய்த்த சிறுவர்கள் அறியாது மற்றவற்றை ஓட்டிச் சென்ற னர். ஊரை யணுகியதும் அவரவர்களுடைய பசுக்களைத் தனித்தனியே பிரித்து ஓட்ட முயல்கையில் ஒரு பசு இல்லாதிருத்தலை யறிந்து, அப் பசு விற்கு உரியவன் நெஞ்சு துணுக்குற்று, மீண்டும் மாடுகள் மேய்ந்த இடத் திற்கு வந்து பல விடங்களிலும் தேடிக் காணாது மனத்துயரோடு வீடு அடைந்தான். எவராலும் அறிந்துகொள்ள முடியாத மறைவிடத்தே அப் பசு இருந்தமையால் அச்சிறுவன எவ்வாறு கண்டு ஓட்டிச் செல்வான் ? மற்ற வர்களும் அப் பசு இருந்த இடந் தவிர பிற இடங்களில் எல்லாம் தேடிச் சோர்ந்தனர். மிகவும் இளங்கன்றினுடைய தாய் அப் பசு. அங்ஙன மிருந் தும், இறைவனுடைய திருவருட் குறிப்போ யாதோ தன் கன்றையும் மறந்து அச் சிசுவுக்கு உறுதுணையா யிருந்தது. எங்கும் ஒளிபரப்பி உயிர் களுக்கு ஊக்க மளித்த கதிரவன் மேற்கடலுள் மூழ்கினான். பறவைகள் ஒலி யடங்கின. மக்கள் நடமாட்டமும் ஆரவாரமும் ஒழிந்தன. ஓங்கி வளர்ந்த மரங்கள் செறிந்து, பகலிலும் இருள் தரும் அச் சோலையில் பசுங் கொடிகள் ஒன்றின்மேல் ஒன்றாகப் படர்ந்து சிறுகுழலைப் போலத் தோன் றிய அப் புதருள் மகவிற்குத் துணையாக ஆ ஒன்றே தனித்திருந்தது. "அந்தோ! பாவம்! ஆதரவற்ற இப் பைங்குழவிக்குத் துணையாக இப் பசு மட்டும் தனித்திருக்கின்றதே" என மனம் இரங்கி அந்திப் பொழுது எனும் சுந்தரவனிதை அங்குத் தோன்றினாள். அவ்வளவில் சந்திரன் விசும்பில் தோன்றிக் குளிர்ந்த கதிர்களைப் பரப்பினான். நாணமுடைய நங்கையர் ஆட வர் முன் நிற்பதற்கு அஞ்சி மறைதல்போல் மாலை யென்னும் மாது மறைந்த னள். இடையர் சேரியிலும், பசும்புல் தரையிலும், பொருநை யாற்றிலும், சோலைகளிலும், வெற்றிடங்களிலும் நிலவு பால்போல் வீசுகிறது. ஆற்றின் கரையிலும், சோலைகளிலும், காடுகளிலும் நரிகள் கூட்டங் கூட்டமாய்ச் சேர்ந்து ஊளை யிடுகின்றன. ஆந்தையும் கூகையும் அச்சந்தரும் குரலில் கூப்பிடுகின்றன. அத் தெய்வப்பசு குழந்தை நினைவாகவே இருப்பினும் பசி மிகுதலால் புதரினின்றும் வெளிவந்து பசும்புல்லைச் சிறிது மேயும். உடனே மகவு நினைவுகொண்டு புதருள் ஓடிப்பார்க்கும். அங்கே குழந்தை அயர்ந்து உறங்குவதைக்கண்டு மீண்டும் வெளியே வந்து புல் மேயும். காற்றி

ஞல் மரக்கிளைகள் ஒன்றோடொன்று தாக்குண்டு ஓர் சிற்றொலி யெழினும் "சரேல்" எனப் புதருள் ஓடிப் பார்க்கும். அவ்விரவில் அம்மகவு ஒரொரு சமயத்து வீறிட்டு அழும். பசு ஒன்றுஞ் செய்ய இயலாது அதன் அருகிற் படுத்து நாவால் தடவிக் கொடுக்கும். சிறிது தூரத்தே ஊளையிட்ட நரிகள் அப் புதருகில் வந்து சத்தமிடும். பசு வெளியே வந்து மிக்க சீற்றத்தோடு அவற்றை ஓட ஓடத் துரத்தும். பின்பு அம் மகவின் அருகிற் படுத்துச் சிறிது கண்ணயரும்." ஆ! இப் பசுவின் பேரன்புச்செயலை நினைந்து மனங் கரைவதா? அல்லது, ஆண்டவன் திருவருட் செயலை நினைந்து வழுத்து வதா? இங்ஙனம் அப் பசு ஒரு நாளல்ல, இரண்டுநாட்களல்ல; ஏழுநாள் வரை காத்திருந்தது. அறக்கடவுளே உருவெடுத்து வந்தது போன்ற அப் பசுவிற் குத் தனது கன்றின் நினைவு வந்துவிட்டது. ஆனால் மகவையோ தனிமை யில் விட்டுச் செல்ல மனமில்லை. இத்தனை நாட்களாக தன் கன்று பால் இல்லாமல் எங்ஙனம் வருந்துகின்றதோ என்ற கவலை அதன் மனதை வருத் தியது. வீட்டிற்குப் போகலாமென்று சிறிது தூரஞ் செல்லும். "ஐயோ! மகவு எங்ஙனம் தனித்திருக்கும்" என்று ஒரே ஓட்டமாக ஓடிப் புதருள் நுழைந்து பார்க்கும். இளஞாயிறு போன்ற அம்மகவு ஒருவகை நினைவும் இன்றி அழகிய இமைகளை மூடி அயர்ந்து உறங்குவதைக்கண்டு அப் பசு மனங் கரைந்து அசைவற்று நிற்கும். சிறிது பொழுதில் தன் கன்று நினைவு மிக, அரவமின்றி வெளியே வந்து வீட்டிற்குச் செல்ல முயன்றது. ஆனால், கால் கள் தடுமாறின; மனம் கலங்கியது. ஒன்றும் செய்ய வியலாது "அம்மா" என்று இருமுறை அழைத்தது. அந்தோ! அப் பசுவின் இரக்க அழைப்பிற் குத் துணை வருவார் எவரும் இலர். தன் கன்றின் நினைவால் வீட்டிற்குச் செல்ல முயலும்பொழுது குழந்தையின் எண்ணம் மேம்பட்டுத் தகைந்து விடும். குழந்தையைப் பிரியாது அதனுடன் இருக்க விரும்பின் கன்றினது வாடி மெலிந்த முகம் அப் பசுவின் மனக்கண்ணில் தோன்றி வருத்தத் தொடங்கியது. என் செய்யும்? "இரண்டு கன்றினுக் கிரங்கும் ஓர் ஆவென இருந்தார்" என்று கம்பர் பெருமான் கூறியது இத் தெய்வப்பசுவை மனத் துட் கொண்டுதான் கூறி யிருக்கவேண்டும். உத்தமச் செல்வி தமயந்தியை அச்சந்தரும் நள்ளிருளில் தனியே விடுத்துப் பிரிந்து செல்ல முயன்ற நள னுடைய மனநிலைமைப் புகழேந்திப்புலவர்,

"போயொருகால் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோலும் ஆயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்"

என்று கூறியதனோடு ஒப்புமை யுடையதாயிற்று இப் பசுவின் நிலையும். இங்ஙனம் செல்லவும் மீளவுமாகவே இருந்த பசு தன் கன்றை ஒருமுறை பார்த்தாவது மீளலாம் என்று மனத் துணிவுகொண்டு அத் தோப்பினின்றும் நீங்கிச் சிறிது தூரம் சென்று, ஆங்கோர் சிறு வழியை அடைந்தது. அடைந் ததும் அதற்குமேல் செல்ல வியலாது அதன் கால்கள் தடுமாறின; மனத் துணிவு தளர்ந்தது. அச் சிறுவழியில் நின்றுகொண்டே "அம்மா, அம்மா" என்று பலமுறை கதறிற்று. நெடுந்தூரத்தே இருவர் அவ்வழியே வரு வதை அப்பசு கண்டது. அவ்வளவில் அதற்குத் தன் கன்றை வீட்டிற் சென்று கண்டதுபோலப் பெருமகிழ்வு பிறந்தது.

# சேக்கிழார்

—(0)—

(வே. கணேசன்.)

"தில்லையவர் புராண கதை
உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றதனூர்ச்
சேக்கிழா ரடிபோற்றி."

முப்புரமெரித்த முதல்வனை அல்லும் பகலும் இடையறாது வணங்கி அன்னவன் கழல் நிழல் சேர்ந்த பெரியாராகிய அடியார்களின் சரிதங்களை யழகுற வமைத்து, உலகத்தார் சிந்தைக்கமுதளித்த பெரியாராவர் சேக்கிழார் நாயனார்.

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும் பாளைவிரி மணங்கமழ் பூஞ்சோலை தோறும் காலாறு கோலியிசைபாட நீடுகளி மயில் நின்றாடு, தொண்டை நாட்டை "கரிகாற் சோழன்" என்று ஓர் வேந்தன் அறவாழி சுழற்றிவந்தான். அவன் மனுநெறி தவறா மன்னன். குடிகளைத் தன் கண்ணெனக் காக்கும் காவலன். அடுத்தார்க்கு நல்லன், எதிர்த்தார்க்குக் கொடியன். அச்சோழன் மூனந்தெரிந்தேற்றிய நற்குடிகள் நாற்பத்தெண்ணாயிரம். அவற்றுள் தலைசிறந்தன, கூடல்கிழான், புரிசைகிழான், வெண்குளப்பாக்கிழான், சேக்கிழார் குடியிவைகளாம்.

அத்தொண்டை நாட்டில் நாலாறு கோட்டங்களுளவாயின. அவற்றுள் புலியூர்க்கோட்ட மென்பதொன்று. அக்கோட்டம் எழுபத்தொன்பது நாடுகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அந்நாடுகளி லொன்றாகிய சேலாறுகின்ற வயல் "குன்றத்தூ"ரில் கடையிற் கூறிய சேக்கிழார் திருமரபு தலைசிறந்து விளங்கிற்று. அஃது, மனிதர்களுக்கு சூது, வாது, வஞ்சனை முதலிய தீய குணங்களுக்குக் காரணமாயிருக்கும் வறுமையென்னும் பேய் தலைகாட்டா தோட்டச்செய்யும் வேளாண்மையில் முதன்மை பெற்றிருந்தது.

அம்மரபின் கிழவரும் கிழத்தியரும் அரனிடத் தன்புபூண்டு ஒழுகி வருவாராயினர். அங்ஙனமிருக்கு நாளில் அம்மரபுக்கிழத்தியர் மணி வயிறுவாய்த்தனர். பின், அன்னவருக்குச் செய்யவேண்டிய வளையிடுதல் முதலிய சடங்குகள் யாவும் முறையே நடைபெற்றன. ஒன்பது திங்கள்களும் முறையே கழிந்தன.

அவ்வம்மையர் வயிறு வாய்த்ததி லிருந்து பத்தாவது திங்களாகிய வைகாசி மாதமும் முறையே வந்தது. அத்திங்களில் பூச நட்சத்திரம்கூடிய நன்னாளில் நல்லோரையில் அவ்வம்மையார், தானும் தனது கணவனுமியற்

றிய நற்றவத்தின் பயனாய் இளஞ்சூரியனே போன்ற வோராண் மகவைப் பயந்தனள். அச்சமயம் நாட்டிலுள்ளோர் மகிழ்வு கொண்டாடினர். விண்ணவர் மலர்மாரி பொழிந்தனர். மண்ணவர் ஆசிமாரி யளித்தனர். அக்குழவிக்கு இருமுது குரவரும் முறையே செய்வனவற்றைச் செய்து, "அருண்மொழித்தேவர்" என்று நற்பெயருஞ் சூட்டினர். குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தது.

தக்க பருவமடைந்தவுடன் பெற்றோர் அக்குழந்தையைப் பள்ளியிற் சேர்த்தனர். அருண்மொழித் தேவரும் கற்பன யாவும் கற்றுத் தேர்ந்து அதன்படி நிற்பவரானார். அவ்வருண்மொழித் தேவரே உலகத்தார்க்குத் "திருத்தொண்டர் புராண" மென்னும் அமிழ்தளித்த சேக்கிழார் பெருமானவர். நாட்கள் செல்லச் செல்ல, தொல்காப்பியர், திருவள்ளுவர் முதலியோரின் இயற்பெய ரொல்கி, குடிப்பெயர் மல்கியதுபோன்று நமது சேக்கிழாருக்கும் அவரது இயற்பெய ரொல்கிக் குடிப்பெயர் மல்குவதாயிற்று. அவருக்குப் "பாலறாவாயர்" என்று ஓர் தம்பியிருந்தனர். அவர்க ளிருவரும் இனிது வாழ்ந்துவந்தனர்.

அச்சமயம் சோழ நாட்டை "அநபாய சோழ" னென்னு மோர் மனுநெறி வழுவா வேந்த னாண்டுவந்தான். அவன், சேக்கிழாரின் கல்வித் திறமையையும், அறிவின் பெருக்கையும், உடல் வன்மையையும், வண்மையையு மறிந்து, அவரைத் தனக்கு மந்திரியாக நியமித்துக்கொண்டான். அவருக் கரசியலில் இருந்த வாற்றலைக் கண்டு வியந்த மன்னன், தனது பெயராகிய "அநபாய சோழன்" என்னும் பெயரையும், "உத்தமச் சோழ பல்லவன்" என்னு முயர் பட்டத்தையு மளித்து அவரைப் பெருமைப் படுத்தினன்.

அவ்வித மிருக்குநாளி லரச னனபாயன், சமணர்களின் தந்திரத்தாலவர்கள் வலையிலீடுபட்டு, அவர்களியற்றிய நூலாகிய "சிந்தாமணி" முதலியவைகளைக் கேட்டின்புற் றிருந்தான்.

அதையறிந்த சேக்கிழார் மனமிக வெதும்பினர். அரசன் சமணனாயின், சைவமழிந்துபடுமே யென்றகமிக வாடினார். பின், இளமையனான வரசனை யண்மி, சமணத்திலுள்ள பொய்ம்மையையும், இழிவையும், இம்மைக்கு மறுமைக்கு முதவாத்தன்மையையும், சைவத்தின் பெருமையையும், உயர்வையும், இம்மைக்கும் மறுமைக்குமுள்ள வுறுதியையும், அதன் பழைமையையும் தெள்ளிதில் எடுத்து விளக்கிக் காட்டினார்.

அதைக் கேட்ட வரசன், "இச்சமண கதை பயனற்றதாயின், உறுதி பயக்குஞ் சிவ கதை யாது? அது நவகதையோ, அன்றிப் புராதனமோ? அதைக் கூறினவர் யார்? கேட்டவர் யார்?" என்று பலபட வினவினன். அதற்குச் சேக்கிழார், சுந்தரமூர்த்தி நாயனார் "தில்லைவாழந்தணர்" என்று தொடங்கிப் பல பதிகங்கள் பாடியதையும், அதற்கு முறையே நம்பியாண்டார் நம்பி முதலியோர், அந்தாதி, உரை முதலியன வகுத்ததையும் முறையே கூறினர். இவற்றைக் கேட்ட, இமயமுதல் சேதுவரை செங்கோ லோச்சும் வளவரசன், சேவையர் காவலன் முக நோக்கிச் சொல்வான்:—

"அரனிடத்தில் அன்பு செலுத்தி முத்தியடைந்த பெரியாரின் சரிதங்களை முறையே ஒரு பெருங்காவியமாக வியற்றியருள் செய்யவேண்டு"

மென்று வேண்டி செப்பரிய திரவியமுங் கொடுத்தான். அதை வாங்கிச் சேக்கிழார் குரிசில் திருத்தில்லையுஞ் சேர்ந்தார்.

அங்கு சென்று, நடனஞ் செய்யா நிற்கும் பரம்பொருளை வணங்கிக் களிப்பென்னுங் கடலுள் மூழ்கினர். பின், கடவுளைத் துதித்து, அவரது மலர்க்கழல்களை வணங்கி "அடிகளே! உனதடியார் சீர் அடியே னுரைத்திட அடியெடுத் திடர் கெடத் தருவாய்" என்றிறைஞ்சி நின்றார். அப்பொழுது, மன்றி னுடுவார் திருவருளினால் "உலகெலாம்" என்னுமோ ரசரீரி வாக் கெழுந்து அங்கு நின்றவடியார்கள் செவிப்புலத் தெங்குமாகி நின்றது. அதைக் கேட்ட வடியார்கள் தலைமிசைக் கூப்பிய கையராய் நிலமிசை விழுந்தெழுந்து கடவுளை மனமார வழுத்தினர்கள்.

பின், உள்ளலார்புரம் நீறெழக்கணை யொன்று தொட்டுயர் மன்றில் வாழ் வள்ளலாருக் கணிந்திருந்த திருமாலை, திருநீறு, மெய்ப்பரிவட்டம் முதலான யாவையும் எள்ளலா ரலரென்று சேவையர் காவலர்க் கினிதளித்து, அன்ன லார் வயனீடு தில்லையி லனைவருங் களி கொண்டனர்.

அதன் பின் சேக்கிழார் குரிசில், சமயக்குரவர்கள் மூவரையும் வணங்கி, திருத்தனர் தந்த சொல்லாகிய "உலகெலா" மென்பதை முதலாகக்கொண்டு,

"உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்."

என்னும் கடவுள் வாழ்த்துப்பாடி, முறையே அறுபத்திமூன்று நாயன்மார் களின் சரித்திரங்களையும் 4253 திருவிருத்தங்களாகப் பாடி முடித்தார். அதற்குத் "திருத்தொண்டர் புராணம்" என்னுந் திருப்பெயருஞ் சூட்டினர். பின்னதை யிரண்டு காண்டங்கள், பதின்மூன்று சர்க்கங்களாகப் பிரித்து, நன்ருக வேட்டி லெழுதி, மைக்காப்புச் சாத்தி, அழகுபெறக் கவளிகையு மமைத்து அதில் வைத்தார். நிற்க,

சேக்கிழாரைப் பெரிய புராணம் பாடவிடுத்த வேந்தன், அஃது எவ் வளவாயிற்றென் றறியும் பொருட்டு, தூதவரையும், அவரறியாது ஒற்றரையும் தில்லைக்கு விடுத்தனன். சென்ற வொற்றர்கள் திரும்பிவந்து முக்காலும் முடிந்துவிட்டதென்று நற்செய்திகூறி பொன்னும் மணியும் பரிசாகப் பெற்ற னர். பின், அரசன் தானே நேரிற் செல்லும்பொருட்டு நால்வகைச் சேனை புடைசூழ தில்லைக்கேகினன். வேந்தன் வரவையறிந்த தில்லை மறையோரும் புராண கதை செய்த கங்கைகுலத் திலகரும் தளவமாலை யபயனை யெதிர்ந்து ஆசிகூறி வாழ்த்தினர்.

சேக்கிழார் நாயனரைத் தவவேடத்திற் கண்ட அநபாயன் முடிமிசைக் கூப்பிய கையனுய் அவரை வணங்கினன். பின், மன்றவில் நின்றுடும் மாலயர்க் கரிய நாதனை மனமார வழுத்தினன். அப்புறம் சேக்கிழார்முனி விரித் துரைத்த கதை கேட்பதற்குத் திசைகடோறு மாளுமோலைகளும் ஏவினன். சிவசமயத்தவர் யாவரும் வந்து திரண்டனர். நகரம், கண்டோர் வானுல கமோ என்றையுறத் தக்கவாறு நன்ருக வழகு செய்யப்பட்டது. திருத் தொண்டர் புராணத்தைக் கேட்க,

"திருநெறித் தமிழ்வல்ல பேர்கள் சிவாகமங்கள் படித்தபேர்
கருநெறிப்பகை ஞானநூல்பல கற்றபேர் மறைகற்றபேர்
குருநெறிக்குரி யோரிலக்கண லக்கியங்கள் குறித்தபேர்
பெருநெறிப்பல காவியங்கதை பேசவல்லவ ரனைவரும்."

வந்து குழுமினர்.

அதன்பிறகு, சிற்சபைக்கு முன்னே, மறையவர் கோமயத்தால் தரையை நன்றாக மெழுகிக் கோலமிட்டு, அறுகாற்றவிசு ஒன்றிட்டு, அதன்மேல் பசும் பட்டு விரித்து, வெள்ளை மடித்திட்டு, மதுமலர் தூவி, விரைநறு தூபங் கொடுத்து, ஓரிடங் கற்பித்து, தண்டமிழ் சேக்கிழார் செய்த புராண முறையை யதன்மீது வைத்து இறைஞ்சிப் போற்றினர். பின், சேக்கிழாரை அதைப் படித்துப் பொருள் விளக்க யாவரும் வேண்ட அவரும் பொருள் விரித்துரைத்தார். சித்திரைத் திங்கள் ஆதிரை நாளிற்றொடங்கி, அடுத்த சித்திரைத் திங்கள் ஆதிரைநாளில் நிறைவேற்றி யரங்கேற்றினார். அரசன் அநபாயன் அதைத் தவறாமல் நாடோறும் கேட்டின்புற்றனன். இனி யவ் வளவர்பிரான் செவிக்குப் பிடிக்குமோ சிந்தாமணிப் புரட்டு!

புராணமரங்கேறியது மதனைப் பசும்பட்டினாற் சூழ்ந்து, பொற்கலத் திருத்தி யக்கலத்துடன் செறிமதயானைச் சிரத்தில் வைத்து, சேவையர் காவலரையு மேற்றி, வெற்றி யரசனுங்கூட வேறி முறைமையா லிணைக்கவரி துணைக் கரத்தால் வீச பவனிவந்தனர்.

அங்ஙனம் வருங்கால், அரசன் தனக்குக் கிடைத்த பேற்றைக் குறித்து மகிழ்ந்தனன். நகரிலுள்ள மாந்தர்கள், சேக்கிழாரின் பெருமையைக் குறித்து,

"மதுரவிராமா யணகதை யுரைசெய்த
வான்மிக பகவனு மொப்பல்ல
விதிவழி பாரத முறைசெய்து கரைசெய்த
வேத வியாதனு மொப்பல்ல
சிதைவற வாயிர நாவுட னறிவுள
சேட விசேடனு மொப்பல்ல
பொதிய மலைக்குறு முனிவனு மொப்பல்ல
புகழ்புனை குன்றை முனிக்கு."

என்று பலபடப் பாராட்டினர்.

பவனி முடிந்து திருக்கோயிலை யடைந்ததும் அத்திரு முறையை திருக் கோயிலின் திருமுன் வைத்தனர். அச்சமயம் அரசன் சேக்கிழாருக்குத் "தொண்டர் சீர்பரவுவார்" என்னுந் திருப்பெயர் சூட்டி வணங்கினின்றனன்.

பிறகு அத்திருமுறையைச் செப்பேட்டி லெழுதிக் கோயிலில் வைத்தனர்.

சேக்கிழார் தவவேடம் பூண்டமையால், அரசன் அவர் தம்பியாகிய பாலறாவாயருக்கு மந்திரிப் பதவியளித்து நீதிநெறி வழுவாது அரசுசெலுத்தி வந்தான்.

சேக்கிழார் தில்லையிலேயே தங்கி கடவுளைப் போற்றிக் கடைசியில் என்று மழியாப் பேரின்ப வீட்டை யடைந்தனர்.

# பாரதி சித்திரம்

## "கண்ணம்மா—எனது குலதெய்வம்"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

அன்பர்களே! இப்பொழுது, முத்திதரும் புண்ணிய தலங்கள் ஏழில் ஒன்ருகிய துவாரகாபுரிக்குச் செல்லவேண்டும். தமிழ் நாட்டிலிருந்து துவாரகைக்குப் போய்ச்சேரப் போதிய பொருள் இல்லையே யென்று எவரும் சிறிதும் கவலையுறவேண்டுவதில்லை. மணிக்கு அறுபது மைல் வேகத்தில் செல்லக்கூடிய பஞ்சாப் மெயிலைக் காட்டிலும் பன்மடங்கு வேக மாகப் போகக்கூடிய ஞானரதம் ஒன்று, எப்பொழுதும் நம்மை ஏற்றிச் செல்லச் சித்தமாகக் காத்துக் கொண்டிருக்கிறது. அதுதான், தேசியக் கவிச்சக்கரவர்த்தியாகிய பாரதியாரின் கவிதைத் திருத்தேர். ஆதலின், பணச் செலவைக் குறித்த பயம் சிறிது மில்லாமல் துவாரகைக்குப் போய் வருவோம் வாருங்கள்!

நீலத் திரைக்கடல் ஓரத்திலே, அழகிய உயர்ந்த கட்டிடங்கள் பல நிறைந்து காணப்படும் இதுவே நவீன துவாரகாபுரி. எங்கு நோக்கினும் கண்ணுக்கினிய அழகிய காட்சிகள்! எங்கணும் செவிக்கினிய மங்கள ஒலி முழக்கம்! இத்திரு நகரத்திலே, செல்வத்திறைவியாகிய திருமகளும் கல்விக் கிறைவியாகிய கலைமகளும் சிறிதும் பிணக்கின்றிக் கைகள் கோத்துக் கொண்டு களிநடம் புரிகிறார்கள் போலும்! அதோ பாருங்கள், உச்சியில் வீர-சக்கரம் அமைந்திருக்கும் அந்த உன்னத மாளிகைதான் கண்ணபிரானது திரு மாளிகை. வாருங்கள், முதன் முதலில் கண்ணபிரானைக் கண்குளிரச் சேவித்துக் கையாரத் தொழுது வாயார வாழ்த்தி மகிழ்வோம்.

அதோ பாருங்கள், அந்த சபாமண்டபம் எவ்வளவு அற்புதமாக விளங்குகிறது! அம் மண்டபத்தின் நடுவிலமைந்துள்ள சீரிய சிங்காசனத்திலே, கம்பீரமாக வீற்றிருப்பது யார்? என்ன விந்தை இது? அப் பெண்மணி யார்? அப் பெண்மணியினெதிரில் கூப்பிய கைகளுடன் நின்று துதிக்கும் அந்த மனிதர் யார்? அவர் நமது தேசிய கவியரசர் பாரதியாரைப் போலல்லவா காணப்படுகிறார்! ஆம், அவரேதான்! சந்தேகமில்லை; உஸ், முணு முணுக்காதீர்கள்! அவர் அப் பெண்மணியை நோக்கி என்னவென்று முறையிடுகிறாரென்பதைக் கவனிப்போம்:—

"நின்னைச் சரணடைந்தேன்!—கண்ணம்மா!
நின்னைச் சரணடைந்தேன்!"

— என்றல்லவா அவர் முறையிடுகிறார்! என்ன விந்தை இது? தனது மெய்யன்பர் எவ்வண்ணம் தன்னைப் பாவிக்கின்றனரோ அவ்வண்ணமே அவர்க

ளுக்குக் காட்சி அளித்தருளும் அருள் வள்ளலாகிய கண்ணபிரானே இப் பொழுது 'கண்ணம்மா' எனும் திருநாமத்துடன் செக்கையில் செங்கோல் தாங்கி மோகனப் புன்னகை பூத்தொளிரும் மலர் முகத்துடன் கூடிய ஜகன் மாதாவாகக் காட்சியளிக்கிறார் போலும்! அருளே உருவாகிய அந்த செல்வ ரின்—இல்லை—செல்வியின் முன்பு, பாரதியார் என்னவென்று முறையிடுகிறா ரென்பதைக் கவனியுங்கள்:—

"பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று—
நின்னைச் சரணடைந்தேன் கண்ணம்மா!"

"கருணையே வடிவாகக் காட்சியளிக்கும் அன்னையே! உனது இன்னருட் படைப்பாகிய இப் பூவுலகிலே, நீ என்னை எதற்காகப் படைத்தாய்? கேவலம் வயிற்றை வளர்ப்பதற்காக நெஞ்ச உறுதியை இழந்து—பல விடங்களிலும்




அலைந்து—தினந்தோறும் வயிற்றுப் பெருமானைப் பூசிப்பதிலேயே கவலை மிகுந்து—ஓய்வு வேளைகளில் பலவகைப்பட்ட வம்புரைகள் அளந்து—பல வகைப்பட்ட விவகாரங்களில் சிக்கி உழன்று—சுயநல மொன்றிலேயே கண் ணும் கருத்துமாயிருந்து—வஞ்ச வினைகள் பலவும் புரிந்து—முடிவில் கொடிய மூப்பை அடைந்து—அங்கம் தளர்ந்து—அகம் குலைந்து—தினந்தோறும் பெருந்துன்பங்கள் பலவும் அனுபவித்து வருந்தி—கடைசியில் கால-பாசத் திற்கு இரையாகி உலகவாழ்வை இழந்து மறைந்தொழியும் விந்தை மிகுந்த வீணர்களைப்போலே, என்னையும் விட்டுவிட எண்ணிவிட்டாயா என்ன? தாயே! இப் பூவுலகிலே, அடியேன் எனக்காக—எனது நலத்திற்காக—எனது

மனமகிழ்ச்சிக்காகவா வாழ விரும்புகிறேன்? இவ்வுலகில் வாழும் எல்லா உயிர்களிடமும் உனது இன்னருளைக் கண்டு, எவ்வுயிர்க்கும் தொண்டு செய்து இன்புறுவதற்காகவே யல்லவா அடியேன் இவ்வுலக வாழ்வை இன்னும் விரும்பி நிற்கிறேன்!

"அருள் இல்லார்க்(கு) அவ் வுலகமில்லை—பொருள்
இல்லார்க்(கு) இவ்வுலகம் இல்லாதியாங்கு"

— என்பது பொய்யா மொழியல்லவா? நான் ஒருவன் மட்டும் அனுபவிப்பதற்காக, பொருளின்மேல் நான் மையல் கொண்டுவிட்டேனு என்ன? வறுமையின் கொடுமையால் வாடித்தவிக்கும் பல்லாயிரக் கணக்கான ஏழை மக்கள், தங்களது கொடுந் துன்பங்களைக் கொஞ்சமேனும் மறந்து வாழும்படி உதவி செய்யவும்—தற்காலப் பாரத சமூதாயத்திலே பெரிதும் மங்கிக் கிடக்கும் கல்விச் செல்வத்தை எங்கும் பொங்கிப் பெருகச் செய்யவும்—தற்சமயம் உரிமை இழந்து கவலை மிகுந்து நிற்கும் பாரத-தேவியின் விடுதலை குறித்து இடையருது உழைக்கக் கூடிய மனவலிமையிற் சிறந்த தேசியத் தொண்டர்கள் பலரைத் திரட்டவும்—தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கேற்ற சிறந்த கைத்தொழில்களை மீண்டும் உயிர்ப்பித்துச் சிறப்புற வளர்க்கவுமே யல்லவா, தற்சமயம் அடியேன் பொன்னளிக்குமாறு உன்னை வேண்டிநிற்கிறேன்! தாய் நாட்டின் முன்னேற்றத்திற் கேற்ற சீரிய தொண்டுகளைச் செய்யும் தூய தேச பக்தர்களின் கூட்டத்திலே, எனது தொண்டின் சிறப்பினுல் நானும் உயர்வையும் புகழையும் ஒருங்கே அடைய விரும்பி நிற்பது குற்றமாகுமா என்ன? எனது தொண்டின் சிறப்பினுல் என்னை அடையக்கூடிய சிறப்பும் புகழும் எனக்கோ உரியன? அவ்விரண்டும், என்னைத் தேசத் தொண்டில் துணிந்து இறங்கச் செய்வித்துப் பணிகொண்ட உனது ஒப்புயர்வற்ற சிறப்புடைய தனிப்பெருங் கருணைக்கே உரியனவல்லவா?

"கூடும் திரவியத்தின் குவைகள்—திறல்
கொள்ளும் கோடிவகைத் தொழில்கள்—இவை
நாடும் படிக்கு வினை செய்து—இந்த
நாட்டோர் கீர்த்தி எங்கும் ஓங்கக்—கலி
சாடுந் திறன் எனக்குத் தருவாய்!—அடி,
தாயே! உனக்(கு) அரியது உண்டோ?—மதி
மூடும் பொய்மை இருளெல்லாம்—எனை
முற்றும் விட்டகல வேண்டும்!"

இத்தகைய நோக்கங்கொண்டு நிற்கும் உனது தொண்டனுகிய என்னை, இரவும் பகலும் பலவகைப்பட்ட கவலைப்பூச்சிகள் கூடிக்கொண்டு என் உள்ளத்தை அரித்து உடலை உருக்கி, உயிரோடு சித்திரவதை செய்து வருவதை நீ அறியாயோ? அறிந்திருந்தும், என் பக்கலில் இன்னும் நீ பாராமுகமாயிருந்து வருவது ஏனே? அக்கவலைப் பூச்சிகளின் கொடுமையைப் பொறுக்க முடியாமல் சிந்தை நொந்து வந்து உன்னைச் சரணடைந்து நிற்கும் என்னை, இன்னும் நீ சோதிப்பது முறைதானே?

"மிடிமையும் அச்சமும் மேவி என் நெஞ்சில்
குடிமை புகுந்தன, கொன்றவை போக்கென்று—
நின்னைச் சரணடைந்தேன் கண்ணம்மா!"

அருளே உருவாகிய அன்னையே! தேசியத் தொண்டில் தீவிரமாக ஈடுபட முனைந்து நிற்கும் எனது மனத்தை, பாழும் வறுமைப்பேய் எவ்வளவு கொடுமையாகத் துன்புறுத்துகிறது தெரியுமோ? தேசப் போரில் தலைப்பட ஆசை மிகுந்து நிற்கும் நான், தினந்தோறும் வறுமைப் பேயின் கொடுமையால் என் மனைவியுடன் வீட்டில் போர் செய்யும்படி நேர்ந்து விடுகிறதே! ஒவ்வொரு நாளும் பொழுது விடிந்ததும், 'அது இல்லை; இது இல்லை; அவனுக்குப் பாக்கி; இவனுக்குப் பாக்கி'—என்று என்னிடம் ஒப்புவிக்கும் குறைகளையும் முறையீடுகளையும் கேட்டுக்கேட்டு என் செவிகள் எவ்வளவு புண்பட்டு வருகின்றன தெரியுமோ? தேசத் தொண்டில் தீவிரமான உற்சாகத்துடன் ஈடுபடுவதற்குப் பெருந்தடையாக இருந்துவரும் வறுமைப்பேயின் கொடுமை இரவும் பகலும் எனது நெஞ்சை எவ்வளவு புண்படுத்துகிறது தெரியுமோ? வீட்டுக்கவலைகள்மட்டும் எனக்கு இல்லாவிட்டால், தமிழர்களைத் தட்டி எழுப்பிப் புத்துயிர் அளித்துப் புத்துணர்ச்சி ஊட்டி புதிய மனோபலத்தை அளிக்கக் கூடிய வீர-மணங் கமழும் தேசீய கீதங்களை ஆயிரக்கணக்காகப் பாடிக் குவித்து விடுவேனல்லவா? வறுமைப் பேய் மட்டும் நெருங்காதிருந்தால், நாட்டு முன்னேற்றத்தின் பொருட்டு நான் மேற்கொண்டுள்ள முயற்சிகள் யாவும் எவ்வளவு விரைவில் வியக்கத்தக்க சிறந்த பயனளிக்கக் கூடும்!

வஞ்சகரை அஞ்சி நடுங்கச் செய்யும் வீரத் தாயே! என் மன உறுதியைச் சோதிக்க நீ விளைவித்துவரும் எத்தகைய சோதனைகளுக்கும் நான் அஞ்சவில்லை; அச்சோதனைகளில் தேறி உனது இன்னருளுக்கு இலக்காகி இன்புறக்கூடிய நன்னாள் விரைவில் வருமென்னும் நம்பிக்கையும் எனக்கு உண்டு. ஆதலின், "ஜயமுண்டு பயமில்லை மனமே!—இந்த—ஜன்மத்திலே விடுதலை உண்டு, நிலை உண்டு—ஜயமுண்டு, பயமில்லை மனமே!"—என்று உற்சாகம் பொங்கித் ததும்பும் உச்சக் குரலிலே வீர முழக்கம் செய்யக்கூடிய மனத் துணிவு, இப்பொழுதும் எனக்கு உண்டு. ஆனால்,......உனது இன்னருட் படைப்பாகிய இவ்வழகிய உலகத்தைப் பலவாறு தூற்றி, கண்முன் காணப்படுவனவெல்லாம் பொய்யென்று பறை சாற்றி, தன் முயற்சியையும் தன்னம்பிக்கையையும் முற்றிலும் கைவிட்டுவிடுமாறு தூண்டி சோம்பேறி—ஞானத்தை வளர்க்கும் வெறும் வாய் வேதாந்தம் பேசி உள்ளுக்குள் கணக்கற்ற கள்ள எண்ணங்களைக் கொண்டு திரியும் போலித் துறவிகளையும், உள்ளுக்குள் பலவகைப்பட்ட வஞ்சக நோக்கங்களையும் சுயநலப் பற்றையும் மறைத்து வைத்துக்கொண்டு சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல் நடிக்கக் கூடிய போலித் 'தேசாபிமானிக'ளையும் நினைக்கும்போது, எனது நெஞ்சம் மிக மிக அஞ்சுகிறது. அவர்களை ஏறிட்டு நோக்கவே, எனது கண்கள் கூசுகின்றன. உரிமை இழந்து வருந்தி நிற்கும் பாரதத்தாயின் விடுதலைக்குப் பெருந்தடைகளாக இருந்துவரும் அப்போலித் துறவிகளும் போலித் தேசாபிமானிகளும் செய்து வரும் கொடுஞ்செயல்களைச் சிந்திக்கும்போதுதான், எதற்கும் அஞ்சாத எனது நெஞ்சமும் பெரிதும் அஞ்சுகிறது. அத்தகைய

அச்சத்தையும் வறுமைப் பேயைப் பற்றிய கவலையையும் எனது நெஞ்சத்திலிருந்து போக்கியருள, நீ தான் திருவுள்ளம் இரங்கியருள வேண்டும்.

"தன் செயல் எண்ணித் தவிப்பது தீர்ந்து, இங்கு
நின் செயல் செய்து நிறைவு பெறும் வணம்—
உன்னைச் சரணடைந்தேன் கண்ணம்மா!"—

உலகுக்கு உண்மையை உணர்த்தியருளிய இன்னருள் வடிவே!

"ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: |
லிப்யதே நஸ பாபேந பத்ம-பத்ரம் இவாம்பஸா" || ;

"யுக்த: கர்ம பலம் த்யக்த்வா சாந்திம் ஆப்நோதி நைஷ்டிகீம் |
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே" || —

—("செய்கைகளை யெல்லாம் பிரமத்தில் சார்த்திவிட்டுப் பற்றுதலை நீக்கி எவன் தொழில் செய்கிறானோ, அவன் நீரில் தாமரை யிலைபோல், பாவத்தால் தீண்டப்பெறுவதில்லை; யோகத்தில் பொருந்தியவன் கர்மப் பயனைத் துறந்து நிஷ்டைக்கு உரிய சாந்தியை அடைகிறான். யோகத்தில் இணங்காதோன், விருப்பத்துக்கு வசமாய்ப் பயனிலே பற்றுதல் கொண்டு தளைப்படுகிறான்")—என்று அன்று நீ பார்த்தனுக்கு அறிவுறுத்தியருளிய பேருண்மையை, என் மனம் என்றும் மறவாதவாறு நீயே இன்னருள் செய்யத் திருவுள்ளம் இரங்கியருள வேண்டும். "என் செயலாலாவது யாதொன்று மில்லை"—என்பதையும்; "அனைத்தும் நின் செயலே"—என்பதையும் என் மனம் ஒருநாளும் மறவாவாறு நீயே திருவருள் புரிந்தருளவேண்டும். நீ ஏவிய செயலைச் செய்வதற்கு உரிய கருவியாகவே நான் இருந்து வருகிறேனென்பதையும்; அச்செயலின் பயனைக் குறித்துக் கவலை கொள்வதற்கு எனக்கு எவ்வித உரிமையும் இல்லை யென்பதையும் நான் என்றும் மறவாதிருக்க வரந்தரவேண்டும். எனது ஆத்மாவுக்குத் தனிப்பெருந் தலைவியாகிய நீ, என்னைக் கொண்டு செய்விக்கும் செயல்கள் வெல்லுமோ தோற்குமோ என்று எண்ணி எண்ணித் தவிப்பதை முற்றிலும் விட்டு விட்டு, நீ எனக்கு இட்ட பணியைச் செய்து முடிக்கும் பேறு வாய்த்ததே எனுமளவில் த்ருப்தியடைந்து, மனம் மகிழ்ந்திருக்கக்கூடிய சீரிய நிலையை இனியேனும் அடியேற்கு அருள் செய்வாயென்ற உறுதியான நம்பிக்கையினாலேயே, இப்பொழுது உனது இணையடிகளில் சரணமடைகிறேன்.

"துன்பம் இனி இல்லை; சோர்வில்லை; தோற்பில்லை—
அன்பு நெறியில் அறங்கள் வளர்த்திட—
நின்னைச் சரணடைந்தேன் கண்ணம்மா!"

இன்னருள் வடிவினளாகிய இறைவியே! ஆன்ம முன்னேற்றத்திற்குப் பெருந்தடையாக இருக்கக்கூடிய அகங்கார மமகாரங்களை அடியேனது அகத்தினின்றும் நீ விலக்கி நெடுங்காலமாய்விட்டது. வெற்றி-தோல்விகளில் முறையே விருப்பு-வெறுப்பு மிகுந்திருந்த காலமும் மலையேறிப் போய்விட்டது. உனது அடியவனாகிய எனக்கு—உனது திருவுள்ளத்திற்கு உகந்த சீரிய

செம்பணிகளைச் செய்வதற்காகவே இவ்வுலகில் வாழ விரும்புபவனுகிய எனக்கு—தேசத்தொண்டு செய்வ தொன்றையே வாழ்க்கையின் முழு-முதல் நோக்கமாகக் கொண்டுள்ள எனக்கு—அத்தொண்டைச் சிறந்த முறையில் திறம்படச் செய்ய, உனது திருவருள் ஒன்றையே ஒப்பற்ற தனிப் பெருந் துணையாக நம்பி நிற்கும் எனக்கு—இனி என்றும்-எதிலும்—எத்தகைய துன்பமும் இல்லை. "இன்பமே எந்நாளும்; துன்பமில் இல்லை" எனும் அருள் மொழியை, வீர ஞானச் செருக்கோடு உச்சக் குரலில் உற்சாகத்துடன் முழங்க நான் என்றும்-எந்நிலையிலும்-சித்தமாகவே இருக்கிறேன். உனது ஒப்புயர்வற்ற இன்னருள் ஒன்றையே துணையாக நம்பி நிற்கும் எனக்கு, இனிமேல் சோர்வு ஏது? தோல்விதான் ஏது? உனது திருவுள்ளம் பூரித்துப் பொங்கும் வண்ணம், இந்நாட்டிலே-அன்பு நெறியிலே-பலவகைப்பட்ட அறங்களையும் செவ்விய முறையில் வளர்க்கவேண்டும் என்பதொன்றே எனது ஆன்மாவின் ஒரு தனிப் பேராசை. அவ்வாசையை இனிது நிறைவேற்றி வைத்தருளத் திருவுள்ளம் இரங்கியருளுமாறு இப்பொழுது உனது திருவடிகளில் சரணமடைகிறேன்.

> "நல்லது—தீயது நாம் அறியோம்; அன்னை !
> நல்லது நாட்டுக ! தீமையை ஓட்டுக ! !
> நின்னைச் சரணடைந்தேன் கண்ணம்மா !"

உனது இன்னருள் விளையாட்டுக்கு உரிய இடமாகிய இப்பூவுலகிலே, உண்மையில் எவை எவை நன்மை பயப்பவை-எவை எவை தீமை பயப்பவை—என்பதை, சிற்றறிவினராகிய நாங்கள் தெளிவாக உணரவல்லோம் அல்லோம்; எவ்வுயிரிலும் புகுந்திருந்து ஒவ்வொரு உயிரையும் திருவுள்ளப்படி ஆட்டுவித்துவரும் சர்வலோகமாதாவாகிய நீ ஒருத்தியே, எல்லாவற்றையும் தெளிவாக உணரவல்லவள். ஆதலின், கருணையே வடிவினளாகிய கண்ணம்மா ! உனது திருவடிகளில் மனப்பூர்வமான உண்மைப் பேரன்புடன் இப்பொழுது சரணமடைகிறேன். எங்களுக்கு உண்மையில் நன்மை பயப்பனவற்றை நிலைபெறுவித்து வளர்க்கும் பொறுப்பையும், தீமை பயப்பனவற்றை விரைவில் ஓட்டி ஒழிக்கும் பொறுப்பையும், கருணைகூர்ந்து இனிமேல் நீயே ஏற்றுக்கொண்டருள வேண்டும்."







# 42. பிரஞ்சுப் புரட்சியின் போக்கும் கொடுமைகளும்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

பிரஞ்சு மன்னர்கள் நடத்திய ஆர்ப்பாட்டங்களினால் செலவு அதிகமாகியது. யுத்தங்களினால் கடன் அதிகமாகியது. கஜானாவில் பணம் இல்லை. நிர்வாகம் நடத்த முடியாமல் ஸ்தம்பித்து விடும் நிலை, அப்போதைய அரசன் லூயி XVIன் காலத்தில் ஏற்பட்டு விட்டது. தேசத்தின் உணவுப் பொருள்களின் விலையோ தாங்கமாட்டாததா யிருந்தது. வேலை செய்த பொது ஜனங்களுக்குக் கூலியோ கிடையாது. வாழ்க்கைக்கு இன்றியமையாத ஊணுக்கும் உடைக்கும் பஞ்சம் வந்து விட்டது. வறுமை வரவும் எண்ணிலா நோய்களும் வந்து சூழ்ந்திருந்தன. ஆகக் கொலை, களவு, பித்தலாட்டம், துரோகம், வஞ்சனைகள் அதிகமாயின. குற்றங்கள் அதிகமாகவே சிறைக் கூடங்கள் நிரம்பின. இந்த ஏழைகளின் வருத்தங்களை மனதில் கொள்ளுவாரும் இலராயினர். பிரபுக்களோ, மத குருமார்களோ அரசாங்க உத்தியோகஸ்தர்களோ வெளியில், இந்த ஏழைகளை வாட்டி வாங்க வேண்டிய வரிகளை வதக்கி வாங்கினர். தங்கள் தங்கள் சுகங்களை எள்ளளவாவது குறைத்துக் கொள்ள விரும்பினார்களில்லை. இந்த ஒரு மாதிரியான சங்கடமான சமூக நிலைமையைக் கண்ட அறிவாளிகள் தான் "ஆதியில் மக்கள் வாழ்ந்த இயற்கையோ டியைந்த வாழ்க்கை"யின் சிறப்புகளையும், அதினின்றும் மனிதவர்க்கம் தவறிவிட நேர்ந்ததையும், ஜனங்களின் கஷ்ட காரணங்களையும் பற்றிய தத்துவங்களைப் பற்றிய பிரசாரங்கள் நடத்தியதாகும்! (அப்படிப் பிரசாரம் செய்து பொது மக்களிடை ஊக்கம் கிளப்பியவர்கள் ரூஸோ, வால்டேர் போன்ற ஆசிரியர்கள் என்பது சொல்லப்பட்டது.) அம்மாதிரி ஒரு தேசத்தின் அபிப்பிராயங்கள் விசேஷமாகப் பரவுவதற்கு அரசியல் வாதிகள் தான் காரணமல்ல. உலகத்தின் பெரும் புரட்சிகளின் ஆஸ்பதங்களைக் கவனித்தால் ஆசிரியர்களின் பிரசாரங்களின் பலன்கள் புலனாகும். அரசியல் வாதிகள் பெரியவர்களிடத்திலும், ஆசிரியர்கள் சிறு பிள்ளைகளிடத்திலும் பிரசாரம் செய்பவர்கள். "A discontented teacher is the greatest social danger" (அமைதியற்ற ஒரு ஆசிரியன் சமூகத்திற்குப் பெரிய ஆபத்தாவான்) என்பதும், அதை யொட்டியே, உபத்திரவங்கள் ஆசிரியர்களுக்கு மட்டும் ஏற்பட்டிருக்கின்றன போலும். உதாரணமாக சமூக நிலையைக் கவனிக்கும் போது நிர்வாகக் கட்சியின் அபிப்பிராயங்களை மேடைகளின் மீதிருந்து எவ்வளவு உரக்கப் பேசினாலும், அது அரசியல் விவகாரங்களில் கலந்து கொள்ளுவதாகக் கருதப் படுவதில்லை. ஆனால் எவ்வளவு நன்மை பயக்கக் கூடிய அம்சமாக பலரும் ஒத்துக் கொள்ளப்பட்ட போதிலும், நிர்வாகக் கட்சியின் எதிர் அபிப்பிராயங்

களில் சதாம்சத்தில் ஒன்றுக்கு அனுதாபம் காட்டினாலுங் கூட, ஆசிரியர்கள் அரசியல் விஷயங்களில் கலந்து கொண்டதாகக் கருதப்பட்டு வேண்டிய அல்லல்களுக்காவதுடன், சந்தேக நோக்குக்கும் ஆளாகிறார்கள் என்ற விஷயம் குறிப்பிடத்தக்கது. ஆனால் உணர்ச்சியை யடைக்கும் தாழ் எங்கும் ஏற்படவில்லை.

இந்த நிலையில் தேச சட்டசபையான States General கூட்டப்பட்டு சட்டம் செய்யும் வேலையிலோ, வரிகள் விதிக்கும் வேலையிலோ, அல்லது நிர்வாக சம்பந்தமான ஒரு வேலையிலோ கலந்து கொள்ள சந்தர்ப்பம் லூயி XIV காலத்திலிருந்தே ஏற்படவில்லை. அரசனும், பிரபுக்களுக்கும் மதகுருமார்களும், நிர்வாகிகளும் நடத்தியது சட்டம். அவர்கள் செய்தது நியாயம். எதையும் செய்யக் கூடியவர்கள். கேட்பார் கிடையாது. அவர்கள் எவருக்கும் பொறுப்புள்ளவர்கள் இல்லை. பணமோ சுத்தமாக இல்லை. அந்த States General சபையைத்தான் கூட்ட வேண்டியிருந்தது. பணத்திற்கு வழி யென்ன வென்று கேட்க வேண்டியிருந்தது. அமெரிக்கர்கள் வெற்றி பெற்ற ஞாபகம் ஜனங்களுக்குத் தெரிய வந்தது. சிறு பிள்ளைகள் விளையாட்டுகளில் சொல்லிக் கொள்ளுவது போன்று "யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கு ஒரு காலம் வரும்" என்பது ஏற்பட்டது. மத குருமார்களைப் பற்றின கெட்ட அபிப்பிராயங்களும், அவர்களிடத்தில் விரோத மனப்பான்மையும் ஏற்பட்டன. பொது ஜனங்களின் ஆதரவற்ற அரசாங்கம் ஒழுங்கான நிர்வாகம் அல்ல என்பதும் ஏற்பட நேர்ந்தது. பணமுடை ஏற்படும் போது பிரபுக்களையும் மத குருமார்களையும் அவரவர்களிடம் உள்ள பணங்களைக் கொடுக்கும்படி செய்வதற்கு அப்போதைய அரசனான லூயி XIVக்கு தைரியமும் இல்லை. மனமும் வரவில்லை. இந்த நிலைமைகளிலிருந்து மாற வேண்டும்" என்ற ஊக்கமோ பெருவாரியான ஏழை மக்களுக்கும் ஊன்றிப் பார்க்கும் உத்தமர்களுக்கும் தீவிரமாக இருந்தது.

இந்த நிலையில் 1614-ம் வருஷம் முதல் கூட்டப்படாமலே இருந்த ஸ்டேட்ஸ் ஜெனரல் சபை, கடைசியாக, 1789-ல் மே மாதத்தில் கூட்டப்பட்டது. அந்த சமயம் கூடிய பல அங்கத்தினர்கள் ஒருவாறு ஊக்கமுள்ளவர்களாகவும் தாராள நோக்க முள்ளவர்களாகவும், உண்மையுள்ளவர்களாகவும் அமைந்த தலைவர்களை யுடையவர்களாக இருந்தார்கள். ஆனால் பாவம் அனுபவ மில்லாதவர்கள் என்று சொல்லப்படுகிறது. ஆகவே அந்த அங்கத்தினர்கள் கூடியிருந்த அதே சபை தேசிய சபை (National Assembly) யாக மாறிக் கொண்டது. அவர்கள் பழைய ஸ்தாபனங்களை யெல்லாம் அடியோடு தொலைத்து, புதிய நிர்வாகத்தை ஸ்தாபிக்க வேலை செய்தார்கள். அரசியல் அனுபவம் அற்றவர்களான நிலையில் ரூஸோவின் இயற்கை வாழ்வுக் கொள்கைகளை அடிப்படையாகக் கொள்ள முயன்றார்கள். அதை யொட்டி அரசருக்கு மிகக் குறைந்த செல்வாக்கை மட்டும் வைத்து, எல்லா பிரஞ்சு ஜனங்களுக்கும் சம உரிமை என்று ஏற்படுத்தினார்கள். தலைமை ஸ்தானமான ரோமாபுரி (கதோலிக) கொள்கையினின்றும் வேறுபட்ட நிலைமைக்கு மத சுதந்திரமும், சாதாரண பிரஜா உரிமைகளும் ஏற்படுத்தி, மதஸ்தாபனத்தை நிர்வாகத்தின் ஒரு பகுதியாக்கி ஒரு இலாகாவாக ஆக்கிவிட்டார்கள்.

ஸ்வபாவமாக எந்த அபூர்வ முறைக்கும் எதிர்ப்பு ஏற்படுவது சகஜமான முறையில், மத குருமார்களும் மற்றவர்களும் குடி முழுகிப் போயிற்

றென்று கூக்குரலிட்டதனாலும், அனுபவ சாத்திய மற்ற போக்கிலும் இந்தப் புதிய அரசியல் நிர்வாகத் திட்டம் ஒழுங்காக நடைபெறவில்லை. அரசனும் தனக்கு உள்ள உரிமைகள் குறைந்தன என்ற தன்மையில் இந்த நிர்வாகத் திற்கு எதிராக சூழ்ச்சிகள் செய்தான்! அது காரணமாக அரசனிடம் அரு வருப்பு அதிகமாயிற்று. தவிரவும் புதிய முறையில் யார் யாருக்கு எந் தெந்த அளவில் என்னென்ன உரிமைகள் உண்டு என்ற விவாதம் கிளம்புகை யில், பிரபுக்களே வேண்டாம் என்றும் மத குருமார்களே வேண்டாம் என் றும், பொது ஜனங்கள் மட்டுமே தேசீய சபையில் ஆதிக்கம் பெற வேண்டும் என்ற விவாதங்கள் வலுத்து, குழப்பங்களும் கூக்குரல்களும் கிளம்பின. இங்கு இப்படியாக தலைநகர் பாரிஸில் நடந்து கொண்டிருக்க, வெளியில் பசியினால் பதை பதைத்து, வாடியலைந்த பாமரர்கள் வெறி கொண்டவர்க ளாகி விட்டனர்.

"உண்ண உணவும் உடுக்க உடையும் இன்றிப் பாமரமக்கள் தவித்துத் தியங்கும் நிலையில் யாருக்கு உரிமைகள் எந்த அளவில் இருந்தா லென்ன? இல் லாவிட்டா லென்ன? இந்த வரட்டுப் பேச்சுகளும் விவாதங்களும், தீர்மா னங்களும், காகிதத் திட்டங்களும் யாருக்கு வேண்டும்?" என்ற மனோபாவ மும் அதனால் உண்டான வீர வெறியும் கொண்டார்கள் பாமர ஜனங்கள். அவ்வளவுதான் தாமதம்! "தடி யெடுத்தவன் எல்லாம் தண்டக்காரன்" என்ற முறையில், பாரிஸ் நகரத்தில் சூழ்ந்து, சிறைச்சாலைக் கதவுகளை யெல் லாம் உடைத்து, திறந்து வெகு காலமாக அடைபட்டுக் கிடந்த குற்றவாளிக் கைதிகளை யெல்லாம் விடுதலை செய்து, Bastille என்ற பெரிய சிறைச்சாலை யை இடித்துத் தகர்த்து, தரையோடு தரையாக்கி சுட்டுப் பொசுக்கினார்கள்! அது ஆனதும், உணவுக் கடைகளையும் துணிக் கடைகளையும் சூறையிட்டு, தானியக் களஞ்சியங்களையும் தாக்கினார்கள். எதிர்த்தவர்களை இரக்க மின் றிக் கொன்று வீழ்த்தினார்கள். பிரபுக்களை விரட்டி யடித்ததில் ஓடியவர்கள் போக பலர் கொல்லவும் பட்டனர். அதுவரையில் பாரீஸுக்கு அருகில் உள்ள வெர்ஸெயில்ஸ் (Versailles) பட்டணத்தில் கூடின தேசீய சபையின் தலைநகர் பாரிஸில் கூடும்படி விரட்டி யடித்தனர். இந்தப் போக்கில் 1793-ல் தேசீய சபையும் அதன் புதுப் போக்கும் நிர்மூலமாகி விட்டது! முறிந்து விட்டது. இதற்குள் ஜனங்களின் கோபக் கனலையும் தீவிரப் போக்கையும் உற்சாக மூட்டிவிட்ட விஷமிகளிற் பலர் தூண்டுதலில், அதி தீவிர இயக்க மும் பயங்கரப் போக்கும் ஏற்பட்டு விட்டன.

நிர்ணயமோ, கட்டுப்பாடோ, ஒழுங்கு முறையோ, தீர்க்காலோசனையோ அற்ற ஒரு சில தீவிரவாதிகள் முன்னணிக்கு வந்து வெறிகொண்ட பாமர ரின் வேகத்தைத் துணைகொண்டு சொல்லுதற்கரிய, நினைக்கவும் மாட்டாத மயிர்க் கூச்சலிடும்படியான அடாத; அக்கிரம, பழி கொலைகளைச் செய்யும் விஷவேலை உதயமாகி விட்டது தான் தாமதம். பிரபுக்களை யெல்லாம் வேட்டையாடிப் பிடித்தனர். அவர்களுக்குச் சொந்தக்காரர்கள், உதவி செய்பவர்கள், ஆதரவு செய்பவர்கள் இன்னும், ஆதரவு செய்ததாக சந்தேகப் பட்டவர்கள் பலரும் இரக்க மின்றி சிறையில் தள்ளப்பட்டனர். சிறைச் சாலைகளில் இடமில்லாத போது, புதுப்புது இடங்கள் சிறைச்சாலைகளாக ஏற்படுத்தப்பட்டன. சொத்துகள் கொள்ளையிடப்பட்டன. வீடுகள் நாச மாயின. இதைக் கண்டு, கிராமவாஸங்களிலும் காட்டுத் தீ போல இந்த

இயக்கம் பரவி ஆங்காங்கு கலகக் கூட்டங்கள் உலவ ஆரம்பித்து விட்டன. சந்தேக நபர்கள் உயிரிழத்தற் கஞ்சி ஓட்டம் பிடிக்கலாயினர். 'சண்டி வெருண்டால் காடு கொள்ளாது' என்பதும், "அயர்ந் தடித்தால் ஐய னும் இல்லை; பிடாரியும் இல்லை" "கெஞ்சினால் மிஞ்சுவது, மிஞ்சினால் கெஞ்சுவது" என்றவா றெல்லாம், அடங்கிக் கிடந்த போது ஆட்டிவைத்த பிரபுக்க ளெல்லாம் திமிறிக் கிளம்பிய காலத்தில், திசை தெரியாது திகைத் தோடலாயினர்! ஐயோ பாவம்!! இப்படி யோடிய வர்க்கத்தில் சேர்ந்தனர் அரசனும் அரசியும் !!! ஓடியவர்களை விரட்டிப் பிடித்து, பாரிஸ் சிறையில் அடைத்தனர் பாமர ஜனங்களின் அமிதவாதத் தலைவர்கள் !!!!

1793-லிருந்து, 1795 வரையில் இந்த வெறிகொண்ட பாமரர் வசம் நிர்வாகம் இருந்தது. இவர்களுக்குச் சரித்திரத்தில் (Jacobins) ஜாகோ பின்ஸ் என்று பெயர். அவர்களுக்குள் "பொதுஜனப் பத்திரக் கமிட்டி" (The Committee of Public safety) என்று ஏற்படுத்திக்கொண்டு பொது ஜனங்களின் உரிமைகளுக்கு எதிராக இருக்கும் நபர்களையெல்லாம் பலியிடத் தீர்மானித்தார்கள். உடனே அரசனும் அவன் மனைவியும் குற்றஞ் சாட்டப் பட்டுத் தலை வெட்டப்பட்டார்கள். அடுத்து அவன் உறவினர்கள் கொல்லப் பட்டார்கள். நெருங்கின பந்துக்களான பெரிய பிரபுக்களின் முறை வந்தது. பிரபுக்களின் முறை அடுத்து சிறிய பிரபுக்கள் அவர்களைப் பின் தொடர்ந் தார்கள். அவர்களுக் கெல்லாம் ஆதரவு செய்தவர்கள், ஆதரவு செய்வதா கச் சந்தேகப்பட்டவர்கள் கொல்லப்பட்டனர். இப்படியெல்லாம் செய்கிறார் களே யென்று சொல்லியோ, இறந்தவர்களிடம் அனுதாபம் காட்டியோ இருந்தால், அவர்களும் துரோகிகளாகி மரணதண்டனை பெற்றனர். பாரி ஸின் தெருக்களில் இரத்த வெள்ளம் ஆறாக ஓடியதாம் என்றால் மிகையா கலே யாகாது. "முடியரசு" என்றாலே "கொடியரசு" என்று நினைக்கப்பட்டு "குடியரசு" ஸ்தாபிக்கப்பட்டது. இந்த குடியரசின் ஆதாவில்தான் மேலே விவரிக்கப்பட்ட கொடுஞ்செயல்கள் நடந்து இந்தக் காலத்திய நிர்வாகத் திற்கு, "பயங்கர தேவதையின் ஆட்சி" (The Reign of Terror) என்று தீராப்பழிப் பெயராக சரித்திரங்களில் குறிக்கப் பட்டிருக்கிறது.

(பலாத்காரத்தின் கோரங்களை நன் குணருவதற்கு இம்மாதிரியான பல சந்தர்ப்பங்கள் சரித்திரங்களில் காணப்படுகின்றதை அனுபவத்தில் உணர்ந்த தன் பலன்தான் சாத்விக எதிர்ப்பு. இது முன்பு கூறியபடி "உலகத்திற்கே ஒரு புதுமையே யன்றோ?") சீக்கிரத்தில் இந்தக் கோரச் செய்கைக்கு ஆஸ் பதங்களாக இருந்ததாகச் சொல்லப்படும் ரோப்ஸ்ப்பியர் (Robespierre) டாண்டன் (Daunton) என்ற இருவரும் அந்தக் கோரமுறையிலே முடி வடைந்தார்கள். கடைசி பலன் கொடுஞ் செயல்களும், கொலைகளும், கஷ் டங்களும், நஷ்டங்களும் என்று வெறுத்த நிதானஸ்தர்கள் நிர்வாகத்திற்கு வந்தபோது, கலகம் ஆரம்பித்த காலத்திய பிரச்னைகளான ஏழைகளுக்கு உண்ண உணவு உடுக்க உடை, தேசியச் செல்வ அபிவிருத்தி முதலியன கவ னிக்கப்பட்டன. மேற்சொன்ன கொலைகளினால் இவ் விஷயங்கள் தீர்க்கப் படாவென்பது சரித்திரம் போதிக்கும் அபூர்வ உண்மை இந்த அக்ரமங்களி னால் அயல் தேசங்களின் திக்பிரமை யடைந்தன.

பிரான்ஸ் நிர்வாகிகள் தங்கள் தேசத்தில் முடியரசை யொழித்து, குடி யரசை ஸ்தாபித்த மாதிரி, இதர தேசங்களிலுள்ள மக்களுக்கு உதவி செய்வ

# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. ராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.



## 3. சரித்திரக் குறிப்பு

### 9. பாண்டிய நாடும் பாண்டியனும்

இனிச் சோழநாட்டை விடுத்துப் பாண்டிய நாட்டினைக் குறித்து இந்நூலகத்துக் காணப்படும் விஷயங்களைக் கவனித்திடுவோம். 'மறை நூலென்று மண்ணகத்துள்ள யாவராலும் ஒரு நிகராகப் புகழ்ந்து கொண்டாடப்படும் சிறந்த நூலாகிய திருக்குறளுக்குத் தமது பேரறிவின் பெரும்பயனின் காரணத்தால், இணையில்லா உரைநூலை எழுதித் தமிழ் உலகிற்கு அளித்திட்ட பேரறிவாளர் பரிமேலழகர், தமது உரை நூலகத்துப் படைப்புக் காலந்தொட்டுத் தமிழ்நாடுகள் மூன்றும், தலைசிறந்து விளங்கி இருந்தனவென்று கூறிப் போந்தனர். பாண்டியநாட்டின் எல்லைகள்,

"வெள்ளாறது வடக்கா மேற்குப் பெருவழியா
வெள்ளாற் புனற்கன்னி தெற்காகு—முள்ளாரு
வாண்டகடல் கிழக்கா மைம்பத்தாறு காதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி."

என்ற வெண்பாவால் விளங்கும்.

(பாண்டிய நாடும் மதுரையும்)

அக்காலத்தில் பாண்டியரின் நாடு தென்பாண்டிநாடு, பாண்டிநாடு, பன்றி நாடென்ற மூன்று பிரிவினைக் கொண்டிருந்ததாகக் கூறுவர். தற்காலத்திலுள்ள ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள் தென்பாண்டி நாடாகவும், மதுரை ஜில்லா பாண்டியநாடாகவும், தஞ்சை ஜில்லாவின் தென் பாகம் பன்றி நாடாகவும் கருதப்பட்டு வந்ததாகத் தெரிய வருகிறது. ஆனைமலை கீழ்ப்பாகத்தில் உற்பத்தியாகி வரும் வைகையாற்றங் கரையிலுள்ள மதுரையம்பதி, பாண்டிய நாட்டிற்குத் தலைநகராக இருந்தது. இது தக்ஷிண மதுரை யென்றும் அழைக்கப்பட்டு வந்தது. (மணி. 13: 105).

மதுரையைப் பற்றிய விஷயங்கள் பல, சிலப்பதிகாரம் ஊர்காண் காதையிலும் (14); அடைக்கலக் காதையிலும் (15); விரிவாகக் காணப்படுகின்றன. "மாடமலி மறுகிற் கூடல்" (முருகு. 71); "மாடம் பிறங்கியமலிபுகழ் கூடல்" (மதுரை. 429); "மாட மதுரை" (சிலப். பதி. 20, 8: 3; 9: 76; 15;

---

தாகப் பிரகடனம் செய்ய ஆரம்பித்தனர். அதன் பலனாக இங்கிலாந்து அரசாங்கம் செய்த காரியங்கள் அடுத்த கட்டுரையின் விஷயங்களாகும்.

"சாந்தம் மெய்ப்பகை வெல்லும், தகைசால்
காந்தியே சான்று." —அறநூல்.

112); "மாடக்கூடல்" (பரிபா. 20: 106); "நான்மாடக் கூடல்" (கலி: 92); "தமிழ் முதல் பிறக்கு நாடாய்த் தயக்கு மாறப்பாண்டி நாடு" (சிவப். சீகாள. நக்கீரச் சருக்கம்); எனப் பிற நூற்களில் பலவாறாகப் புகழ்ந்து கூறப்பட்டுள்ள பாண்டியநாடு மதுரையை மணிமேகலையிலும், "காவலன் பேரூர்" (2: 54); "பாண்டி நன்னாடு" (14: 55); "பதிகெழு நன்னாடு" (25: 101); என அதன் ஆசிரியர் சிறப்பித்துக் கூறியுள்ளன காண்க.

இம் மதுரையம்பதியில், "மிக்க செல்வத்து விளங்கியோர் வாழ்ந்து" வந்தனர். (13: 104; 22: 105) அது அரசனால் நன்கு காக்கப்பட்டு வந்தது. (13: 85) சிந்தா தேவியின் கோயிலும், மதுராபதியின் கோயிலும் அங்கு இருந்தது. தமிழ்நாட்டில் மேன்மையாக விளங்கியதொரு நகரமென்று குறித்தற்கோ, அன்றித் தமிழ்க்கழகங்கள் விளங்கியதும், தமிழைப் பெரிதும் ஆதரித்த மன்னர்கள் வசித்ததும், தமிழ் வளர்ந்து வந்ததுமாகிய பிரசித்தி பெற்ற நாடென்பதைப் பிரித்துக் காட்டுதற்கோ சாத்தனார், "தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்" எனப் பெருமைப்படுத்திக் கூறுகின்றார். நற்றமிழ்நாடு மதுரை யென்பது,

"செந்தமிழ் நாடே
சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனுஞ்
சௌந்தர பாண்டிய னென்னுந் தமிழ்நாடனுஞ்
சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டிவள நாடென்ப."

என்ற சூத்திரமும் கூறுதல் காண்க.

## ('மணிமேகலை'யும் மதுரையும்)

சிலம்பை விற்றிடும் நோக்கமோடும் கண்ணகி தனது கணவனுடன் மதுரை சென்றாள். விதி வசத்தால் காவலனது ஆணைப்படி கைவாளுக் கிரையாகி அவள் காதலன் இறந்தான். (மணி, 8: 41-3) அக் கடுந்துயரம் பொறாது கற்பரசி மதுரையை எரிவாயுட் படுத்தினள் (2: 50-4). அதன் பின்னர், பன்னிரண்டு ஆண்டுகளாகப் பாண்டி நன்னாடு, மன்னுயிர் மடிய மழை வளமிழந்து, கொடிய வறுமையால் வருந்திவந்தது. (14: 55-6; 25: 101-3) இவ் விஷயங்களையன்றி, மதுரையைக் குறித்தும், பாண்டிநாட்டைக் குறித்தும் விவரமாகப் பிற செய்திகள் ஒன்றும் இந்நூலில் காணப்படவில்லை.

சிலப்பதிகாரத்திலும் மதுரை, கோவல னிறந்த பின்னர் வறுமையால் வாடியதென்றும், அது தெரிந்து கொற்கை நகரிலிருந்து பாண்டிய நாட்டை ஆண்டுவந்த இளஞ் செழியன், பொற்கொல்ல னொருவன் காரணமாகக் கோவலன் இறந்தானுகையால், பொற்கொல்லர் ஆயிரம் பேரைப் பலியிட்டுச் சாந்தி செய்தனனென்றும் கூறப்பட்டுள்ளன. இவ்விளஞ் செழியனை வெற்றி வேற்செழிய னென்பர். (சில: 27: 114-138.)

## (கொற்கை)

மணிமேகலையில் மதுரையோடன்றிப் பாண்டிய நாட்டின் மற்றொரு தலைநகராக இருந்த "கொற்கையம் பேரூரை"ப் பற்றியும் (13: 84) சிற்சில

இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. கொற்கை யென்பது அகஸ்திய மலைக் கூட்டத்தில் உற்பத்தியாகிவரும் தாம்பிரபரணியின் வாயிலுள்ள தென்பர். அது பாண்டியர்களின் பழைய இராசதானியாக இருந்தது. பாண்டிய மன்னரின் பிரதிநிதியாக இளவரசனால் ஆளப்பட்டு வந்ததொரு புராதன நகரமென்பர். தென்னாட்டில் விளங்கிய சிறந்ததொரு துறைமுகப்பட்டினம் வெளிநாட்டு வியாபாரத்திற்குப் பயன்பட்ட தொரு பேரூர். இங்கு நடந்து வந்த பவழ வியாபாரத்தைக் கிரேக்காது நூற்களும் புகழ்ந்து உரைக்கின்றன.

'மணிமேகலை'யில், தீய ஒழுக்கத்தால் கணவனைப் பிரிந்து கன்னியா குமரிக்கு நீராடச் சென்ற வாரணாசியில் வசித்து வந்த அந்தணன் அபஞ்சிக னின் மனைவி சாலி யென்பாள் "பொற்றேர்ச் செழியன் கொற்கையம் பேரூ" ருக்குக் காதவழி தூரத்திலுள்ள (13: 84) இடைச்சேரியில் ஒரு ஆண்மக வைப் பெற்றதாகக் கூறப்பட்டுள்ளதால்; பொற்றேர்ச் செழியன், கொற் கையை அரச இருக்கையாகக் கொண்டு ஆண்டு வந்தனனா? அன்றி மது ரையி லிருந்து ஆண்டுவந்த பொற்றேர்ச் செழியனாகிய பாண்டியனுக்குச் சொந்தமாகிய கொற்கையம் பேரூரைச் சாலி குறித்தனளா வென்பது விளங்க வில்லை. கோவலன் இறந்ததும், கண்ணகி எரித்ததும் மதுரையென்றே கூறப்பட்டிருப்பதால், அக் காலத்தில் மதுரையே பாண்டியரின் தலைநகராக இருந்தது விளங்கும். ஆகலின் இங்கு குறிக்கப்பட்டுள்ள செழியன், மது ரையி லிருந்தே ஆண்டுவந்தன னெனவும் அவனது ஆட்சிக்குட்பட் டிருந்த கொற்கையைச் சாலி அடைந்தன ளெனவும் கொள்ளுதலே சாலவு மேற்ற தாகும். சாலி பெற்ற ஆபுத்திரன் இறந்து சாவகநாட்டில் மறுபிறப் பெடுத் துப் புண்ணியராசனென்ற பெயரோடும் ஆண்டு வந்தனன். அப் புண்ணிய ராசனையே மணிமேகலை மணிபல்லவத்திற்கு அழைத்துச் சென்றனள். ஆக லின் புண்ணிய ராசனுக்கு ஒரு பிறப்பிற்கு முன்பிருந்த சாலி குறித்திடும் பொற்றேர்ச் செழியன், புண்ணியராசன் சாவகநாட்டில் பிறந்து, பின் அர சனா யிருந்த காலத்தில் நிகழாது, அவன் பிறத்தற்கு முன்பு நடந்திருக்க வேண்டிய செயலாகிய கோவல னிறந்ததற்குக் காரணமா யிருந்த நெடுஞ் செழியனாகவே இருத்தல் வேண்டும். மற்றும் சிலப்பதிகாரக் கதைத் தொடர்பை யொட்டி மணிமேகலையின் கதை நிகழ்ச்சியும் நடந்துள்ளதால், மணிமேகலையின் காலத்திலிருந்த ஆபுத்திரனாகிய புண்ணிய ராசனது தாயாக முற்பிறப்பிலிருந்த சாலியின் காலத்தவனாகலின், இம் மன்னன் கண்ணகியின் கணவனைக் காரணமின்றிக் கொன்றதால் கவலையுற்று, ஆராயாது செய்த அடாத பிழைக்குத் தண்டமாகத் தன்னுயிரை மாய்த்துக்கொண்ட பாண்டி யனா யிருத்தல் வேண்டுமென்றே கூறலாம். மணிமேகலையின் காலத்திலிருந்த தாகக் குறிக்கப்பட்டுள்ள மதுரையும், கண்ணகியால்,

> "பார்ப்பா ரறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்
> மூத்தோர் குழவியெனு மிவரைக் கைவிட்டுத்
> தீத்திறத்தார் பக்கமே சேர்க."

(சிலப்ப. 21: 53-5) என்று சபித்து எரிக்கப்பட்டு அழிந்து சென்ற மதுரைக் குப் பிந்தியதாகவே இருத்தல் வேண்டும். தனது சாபத்தால் மதுரை அழிந்தொழிந்த செய்தியைக் கண்ணகி தெய்வம் மணிமேகலையிடம் கூறு தல் காண்க. (காதை. 21.)

(பொற்றேர்ச் செழியன்)

செழிய னென்பது பாண்டியரைப் பொதுவாகக் குறித்திடும் பெயர்களில் ஒன்று. பிற, மாறன், தென்னவன், வழுதி யென்பனவாம். இங்கு ஆசிரியர் பொற்றேர்ச் செழியனென்ற அடைமொழியோடும் பாண்டியனை அழைப்பாராயினர். கண்ணகியின் சீற்றத்திற்கு இலக்காகிய பாண்டியன் நெடுஞ் செழியனென்பது பிறநூற்களில் விளங்கும் உண்மையாகும். எனவே இப் பொற்றேர்ச் செழியன் அந்நெடுஞ் செழியனாதல் வேண்டும். நெடுஞ் செழியனாகிய இப் பொற்றேர்ச் செழியனை, ஆரியப்படை கடந்த நெடுஞ் செழிய னெனவும் கூறுவர். இளங்கோவடிகள், "வடவாரியர் படைகடந்து, தென்றமிழ் நாடொருங்கு காணப், புரைதீர் கற்பிற்றேவி தன்னுடன், அரசுகட்டிலிற் றுஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழிய" னெனச் சிறப்பாகக் கூறியுள்ளனர். (மதுரைக் காண்டத்தி னிறுதிக் கட்டுரை.)

(நெடுஞ் செழியன்)

இளங்கோவடிகளின் வாக்கால், இச் செழியன் வடநாடு சென்றதும், ஆரியரது படையை வென்றதும், நல்லாட்சி புரிந்ததும், தென்னாடு காண உயிர்துறந்ததும் விளங்குகின்றன. நெடுஞ் செழியனென்று பெயர் தாங்கிய மன்னர்கள் பலர் அக்காலத்தில் இருந்ததால், அவரில் இவனை வேறாகக் காட்டப் பழம்தமிழ் நூற்புலவர் இவனை "ஆரியப்படை கடந்த நெடுஞ்செழிய" னென்பாராயினர். மணிமேகலையின் ஆசிரியரது காலத்திலேயே நெடுஞ் செழியனென்று பெயருடைய அரசர்கள் இருந்ததால், அவரினும் இம் மன்னன் பிரித்துக் காட்டப்பட்டுள்ளனன். இந் நெடுஞ்செழியன சிறந்த தமிழ்ப் புலவன். தமிழ்ப்புலவர்களை ஆதரித்து வந்த ஈகையாளன். சங்க நூற்கள், நெடுநல்வாடையிலும், மதுரைக் காஞ்சியிலும் இம்மன்னனது முழுவரலாற்றையும் காண்க. இப் பாண்டியன் கல்வியின் உயர்வைக் குறித்துக் கூறியதாக உள்ள பாடலொன்று புறநானூற்றில் (183) உள்ளது. அச் செய்யுளின் இனிமை போற்றற் குரியது.

சிலப்பதிகாரம் உரைபெறு கட்டுரையில் கூறப்பட்டுள்ள வெற்றி வேற் செழியன், இவ்வாரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்குப் பின் நாடாள வந்தவனாக இருத்தல் வேண்டும். இவ் வரசனது வரலாறு அடியார்க்கு நல்லாரின் உரையில் விரிவாகக் காணப்படுகின்றது. (சிலப், 27: 127-8) பழிக்குப் பாத்திரனான பாண்டியன் நெடுஞ்செழியனுக்குக் கோப்பெருந் தேவியென்ற மாதரசி மனைவியாக வாய்ந்திருந்தாள். அக் கற்பரசி, தனது கணவன் அரசுகட்டிலில் வீழ்ந்து துஞ்சிய செயல்கண்டு தாளாத மனத்தினளாகித் தானும் ஒருங்குடன் மாய்ந்து உலகுள்ளளவும் புகழுக்குப் பாத்திரமாயினள். அவ்வருஞ் செயலைப் பாராட்டி,

"கலக்கம் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானென
தன்னுயிர் கொண்டவன் உயிர் தேடினள்போல்
கோப்பெரும் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்."

என்ற செய்யுளடிகள் கூறுவன நோக்குக. (தொடரும்.)

# புராணப் புதையல்கள்

(V. சங்கர ஐயர்.)

(சென்ற இதழ் தொடர்ச்சி.)

பிரம்மா சொல்லுகிறர்:—(53-67)

இந்த உலகத்தின் ஜனனியாகவும், ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளை நடத்துகின்ற விசுவேசுவரியாகவும், நிஸ்துல்ய தேஜஸோடு கூடின விஷ்ணுவின் யோக நித்திரையாகவும் இருக்கின்ற பகவதியை நான் ஸ்துதிக்கின்றேன். ஸ்வாஹா, ஸ்வதா, வஷட்கார, ஸ்வராத்மிகா, ஸுதா, அக்ஷரம், நித்யை, திருமாத்ராத் மிகை, நன்ருகச் சொல்ல முடியாத அர்த்த மாத்திரை, ஸந்தியை, ஸாவித்ரீ, சிரேஷ்டயான பூமி, இந்த பூமியை பரிபாலிப்பவள், அதை ஸிருஷ்டிப்பவள் எல்லாம் நீயே. இந்தப் பூமியை ரக்ஷிப்பவளும், முடிவில் இதை ஸம்ஹரித்திடுபவளும் நீதான். ஸிருஷ்டியில் ஸிருஷ்டிமயீ, ரக்ஷிப்பதில் ஸ்திதிமயி, பூமி அழியும் காலத்தில் ஸம்ஹாராத் மிகையும், ஹே ஜகன்மூர்த்தே! நீ தான். மஹாவித்யை, மஹாமாயை, மஹாமேதை, மஹாஸ்மிருதி, மஹாமோஹை, மஹாதேவி, மஹேஸ்வரீ, ஸத்வ ரஜஸ் தமோ குணங்களைப் பல பிரகாரத்தில் பகுத்து வைக்கும் ஸமஸ்த பிரகிருதியும், ஹே பகவதீ! நீ தான். காளராத்திரி, மஹாராத்திரி, அதிக பயத்தைக் கொடுக்கும் மோஹராத்திரி, ஸ்ரீ, ஈசுவரி, ஹ்ரீ, போத லக்ஷணையான புத்தி, லஜ்ஜை, புஷ்டி, துஷ்டி, சாந்தி, க்ஷாந்தி, இவைகளும் நீயே. கட்கம், சூலம், கதை, சக்கரம், சங்கு, வில்லு, பாணம், பரிகம் இவைகளையெல்லாம் அணிந்து கொண்டிருக்கும் சண்டிகையும் நீயே! அதிஸௌம்ய வஸ்துக்களில் நீ ஸௌமயை, அதிஸௌந்தரிய மானவைகளில் நீ ஸுந்தரி, பராபரங்களில் நீ பரை, பரமேசுவரீயும் நீயே. எங்கெங்கே ஸத்தாகவும் அஸத்தாகவும் உள்ள வஸ்துக்கள் உண்டோ அவைகளின் சக்தியெல்லாம் நீயே. அப்பேர்ப்பட்ட பிரபாவமுள்ள உன்னை நான் எப்படி தோத்திரம் செய்வது! உலகத்தை ஸிருஷ்டிப்பதுய, காப்பதும், அழிப்பதும் ஆகிய முத்தொழில்களை எந்த விஷ்ணு செய்கிருனே அவனை நீ நித்திரைக்கு அடிமையாக்கி விட்டாயே! உன்னை ஸ்தோத்திரம் செய்ய வல்லவன் யார்? என்னையும் விஷ்ணு சிவன் இவர்களையும் உன் சரீரத்திலேயே வைத்துக் கொண்டிருக்கும் உன்னை ஸ்தோத்திரம் செய்வதற்கு யாரால் தான் ஸாத்தியம்? இப்படி உன்னுடைய விசேஷமான பிரபாவங்களைக் கொண்டு ஸ்தோத்திரிக்கப் பட்ட நீ, துர்த்தர்ஷர்களான இந்த மது கைடபாஸுரர்களை மோஹிக்கும்படிச் செய்வாயாக. விஷ்ணுவை எழுப்பி, இந்த பெரிய அஸுரர்களைக் கொல்லும்படிக்கு போதனை செய்வாயாக!

மஹரிஷி சொல்லுவதாவது:—(68-73)

அப்பொழுது, அங்கே பிரம்மாவினுல் இந்தப் பிரகாரம் துதி செய்யப்பட்ட மாயாதேவி மது கைடபர்களைக் கொல்லும் பொருட்டு, விஷ்ணுவை,

பிரபோதனம் செய்ய உத்தேசித்துக் கண்கள், முகம், கைகள், ஹிருதயம், மார்பு, மூக்கு இவைகளிலிருந்து அவ்யக்த ஜன்மாவான பிரம்மாவுக்கு முன் பிரத்தியக்ஷமானாள். மஹாமாயை விஷ்ணுவை விட்டு நீங்கினதும், ஜகதீசனான ஜநார்த்தனன் ஒரே கடலின் மீது இருக்கும் அநந்தசயனத்திலிருந்து எழுந்திருந்து, பிரம்மாவைக் கொல்வதற்குத் தயாராகக் கோபத்தால் சிவந்த கண்களோடு கூட நிற்கின்ற அதிக வீரிய பராக்கிரமமுள்ள அந்த மது கைடப அசுரர்களைக் கண்டார். உடனே எழுந்திருந்து, பகவானான ஹரி அவரோடு கூட ஐயாயிரம் வருஷம் பாஹு யுத்தம் செய்தார். பலத்தால் மமதையுள்ள அவர்கள் மஹாமாயையால் மோஹிக்கப் பட்டவர்களாகி பகவானான விஷ்ணுவைப் பார்த்து, "வரம் கேட்டு வாங்கிக் கொள்" என்று கூறினார்கள்.

**பகவான் சொன்னதாவது:—(74)**

இப்பொழுது நீங்கள் வரம் கொடுப்பதாக யிருந்தால் இந்த வரமே எனக்கு வேண்டும். "நீங்கள் இருவரும் என்னால் கொல்லப்பட வேண்டும்" வேறு வரம் எனக்கு எதற்கு? இப்பொழுது இதே வேண்டும்.

**மஹரிஷி சொல்லுவது:—(75-78)**

இப்படி அப்பொழுது வஞ்சிக்கப்பட்ட அவர்கள் லோக மெல்லாம் ஜலமயமாக இருக்கப் பார்த்து, கமலேக்ஷணனான பகவானோடு சொன்னதாவது, "உம்முடன் கூடச் செய்த யுத்தத்தால் நாங்கள் வெகு சந்தோஷமடைந்திருக்கிறோம். நீர் எங்களுக்கு உத்தமமான யமனே யாகும். ஜல மில்லாத ஒரு இடத்தில் வைத்து எங்களைக் கொல்லவும்" அப்படியே யாகட்டும் என்று சங்கும் சக்கரமும் தரித்த பகவான் அவர்களுடைய சிரஸ்ஸை தன்னுடைய ஜகனத்தில் வைத்து சக்கரத்தால் முறித்தார். இப்படி பிரம்மா ஸ்துதித்ததினால் தான், அந்த தேவி தானாக ஆவிர்ப் பவித்தாள். அவளுடைய பிரபாவத்தை இன்னும் சொல்லுகிறேன் கேட்கவும். இது

ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் ஸாவர்ணி மந்வந்தரத்தில் தேவீ மாஹாத்மியத்தில் (1) மது கைடப வதம் என்ற எழுபத்தெட்டாவது அத்தியாயம்.

## இரண்டாவது அத்தியாயம்.

**மஹரிஷி சொல்லுகிறார்:—(1-7)**

முன் காலத்தில் தேவர்களுக்கு தேவேந்திரனும், அஸுரர்களுக்கு மஹிஷாஸுரனும் அதிபதிகளாக இருந்த போது ஒரு நூறு வருஷம் பூராவும் தேவாஸுர யுத்தம் நடந்தது. அதில், அதி வீரியவான்களான அஸுரர்கள் தேவஸைன்யத்தைத் தோற்கடித்து விட்டார்கள். தோற்றுப் போன தேவர்கள் பத்மயோனியான பிரம்மமாவுடன் கூட, சிவனும் விஷ்ணுவும் இருக்கின்ற இடத்துக்குச் சென்றார்கள். தேவர்கள் அவ் விருவர்களிடம், மஹிஷாஸுரனுடைய படை யெடுப்பையும் அவன் தேவர்களை ஜயித்ததையும் விவரமாகச் சொன்னார்கள்—'சூரியன், சந்திரன், அக்னி, வாயு, இந்திரன், யமன், வருணன் இவர்களுடையவும், மற்ற எல்லாத் தேவர்களுடையவும்

அதிகாரங்களை அவனே தான் செய்ய ஆரம்பித்து விட்டான். அந்தத் துராத்மாவான மஹிஷன் ஸ்வர்க்கத்திலிருந்து விரட்டி விட்டதனால் தேவர்களெல்லாம் மனிதர்களைப் போல பூமியில் சஞ்சரிக்கிறார்கள். அந்த அஸுரனுடைய சேஷ்டைகளை யெல்லாம் தங்களுக்குத் தெரிவித்தோம். நாங்கள் தங்களையே சரணம் அடைந்திருக்கின்றோம். அவனைக் கொல்லும் மார்க்கத்தைக் குறித்து யோஜிக்கவும்! (8-12)

இப்படித் தேவர்கள் சொன்னதைக் கேட்ட மதுஸூதனனும் சம்புவும், புருவத்தைச் சுளித்து அதிக கோபத்தோடு கூடினவர்களானார்கள். உடனே கோபம் நிறைந்த சக்கிராயுதனுடையவும், சிவனுடையவும், பிரம்மாவினுடையவும் மூகங்களி லிருந்து ஒரு பெரிய தேஜஸ்ஸு புறப்பட்டது. இந்திரன் முதலான மற்ற தேவர்களுடைய சரீரங்களிலிருந்தும் ஒரு பெரிய தேஜஸ்ஸு புறப்பட்டது. அவைகளெல்லாம் ஒன்றாகச் சேரவும் செய்தது. திக்குகளெல்லாம் வியாபித்திருந்த அந்த ஜ்வாலாமாலைகளோடு கூடின தேஜஸ்ஸுகளின் கூட்டம் ஜ்வலிக்கின்ற ஒரு பர்வதம் போல தேவர்கள் முன் காணப்பட்டது. மூவுலகங்களையும் பிரகாசிக்கச் செய்கின்ற அந்த ஸர்வதேவ சரீரஜமான நிஸ்துல்ய தேஜஸ் அவ் விடத்தில் ஒன்று சேர்ந்து ஒரு ஸ்திரீயாக ஆயிற்று. (13-17)

சிவதேஜஸ்ஸி லிருந்து மூகமும், யமனுடைய தேஜஸ்ஸினால் தலைமுடியும், விஷ்ணுவி னுடையதனால் கைகளும், ஸோமனுடையதனால் இரு தனங்களும், இந்திரனுடைய தேஜஸ்ஸினால் இடையும், வருணனுடையதனால் கணுக்கால்களும், பூமியின் தேஜஸ்ஸினால் நிதம்பமும், பிரம்மாவின் தேஜஸ்ஸினால் கால்களும், சூரியனின் தேஜஸ்ஸினால் கால்விரல்களும், வஸுக்களின் தேஜஸ்ஸினால் கை விரல்களும், குபேரன் தேஜஸ்ஸினால் மூக்கும், பிராஜாபத்ய தேஜஸ்ஸினால் பற்களும், அக்னியின் தேஜஸ்ஸினால் மூன்று கண்களும், ஸந்தியையின் தேஜஸ்ஸினால் புருவங்களும், வாயுவின் தேஜஸ்ஸினால் காதுகளும் உண்டாயின. இப்படியே மற்ற எல்லாத் தேவர்களுடையவும் தேஜஸ்ஸுகளால் ஸர்வ மங்களையான தேவி உண்டானாள். (18-33)

எல்லாத் தேவர்களுடையவும் தேஜஸ்ஸிலிருந்து ஆவிர்பவித்த அந்தத் தேவியைப் பார்த்து மஹிஷபீடிதர்களான தேவர்கள் மிகச் சந்தோஷமடைந்தார்கள். பினாகபாணி தன் சூலத்திலிருந்து ஆகர்ஷித்து எடுத்து ஒரு சூலத்தைக் கொடுத்தார். கிருஷ்ணன் தன் சக்கரத்திலிருந்து எடுத்து ஒரு சக்கரத்தைக் கொடுத்தார். வருணன் சங்கையும், அக்னி வேலையும் அவளுக்குக் கொடுத்தார்கள். வாயு வில்லும், அம்புகள் நிறைந்த அம்புறாத்தூணியும் கொடுத்தான். இந்திரன் தன் குலிசத்தி லிருந்து வஜ்ரத்தையும், ஐராவத மென்ற யானையிலிருந்து மணியையும் எடுத்து அவளுக்குக் கொடுத்தான். யமன் கால தண்டத்திலிருந்து தண்டமும், வருணன் பாசமும் கொடுத்தார்கள். பிரஜாபதியான பிரம்மா அக்ஷமாலையையும், கமண்டலத்தையும், கொடுத்தார். சூரியன் தன் ரச்மிகளை எல்லா ரோம கூபங்களுக்குக் கொடுத்தான். காலன் நிர்மலமான கட்கத்தையும், சர்மத்தையும் கொடுத்தான். பாற்கடல் நிர்மலமான ஒரு முத்துமாலையையும், புது வஸ்திரங்களையும் கொடுத்தது. திவ்யமான சூடாமணி, குண்டலம், வளைகள், சுப்ரமான அர்த்த சந்திரன், எல்லாக் கைகளுக்

கும் தோள்வளை, விமலமான நூபுரங்கள், அதி விசேஷமான கண்டாபரணம், எல்லா விரல்களுக்கும் விசேஷமான மோதிரங்களும், அதி நிர்மலமான மழுவும், பல மாதிரி ஆயுதங்களும், அபேத்யமான கவசமும் தேவிக்கு விச்வகர்மாவானவர் கொடுத்தார். சமுத்திரம் சிரஸ்ஸுக்கும் உரஸ்ஸுக்கும் ஒவ்வொரு மனோஹரமான வாடாத் தாமரை மாலையைக் கொடுத்தது. ஹிமவான் வாஹனமான சிங்கத்தையும் பலவிதமான ரத்னங்களையும், குபேரன் மத்யம் நிறைந்த ஒரு பான பாத்திரமும் கொடுத்தார்கள். இந்தப் பூமியை தாங்கிக் கொண்டிருக்கின்ற ஸர்வ நாகேசுவரனுகிய சேஷன் மஹாமணி விபூஷிதமான நாகஹாரத்தைக் கொடுத்தான். மற்றத் தேவர்களும் ஆயுதங்களாலும் ஆபரணங்களாலும தேவியை ஸம்மானித்து திரும்பத் திரும்ப உச்சமாக அட்டஹாஸம் செய்தார்கள். அந்தப் பெரும் நாதத்தால் ஆகாசம் பூராவும் நிறையப்பட்டது. பெரிய வேறொரு பிரதித் தொனியு முண்டாயிற்று. லோகங்க ளெல்லாம் குலுங்கின. சமுத்திரங்கள் கலங்கின. பூமி நடுங்கினது. எல்லா மலைகளும் இளகிற்று. ஸிம்ஹ வாஹனையான தேவியைப் பார்த்து எல்லா தேவர்களும் 'ஜய' என்று சொன்னார்கள். (34-48)

முனிவர்கள் பக்தியோடு வணங்கி தேவியை ஸ்தோத்தரித்தார்கள். மூன்று லோகங்களும் க்ஷோபித்ததாகக் கண்ட அந்த அஸுரர்கள் படைகளைத் திரட்டி ஆயுதங்களோடு கூட புறப்பட்டார்கள். 'ஆ! இதென்ன !' என்று கோபத்தோடு கூடச் சொல்லிக் கொண்டு மஹிஷாஸுரன் எல்லா அஸுரர்களோடு சூழப்பட்டவனாய் அந்தச் சப்தத்திற்கு நேராகச் சென்றான். அப்பொழுது தன் தேஜஸ்வினால் மூன்று லோகத்தையும் பிரகாசிப்பித்துக் கொண்டும், பூமி கீழே போகும்படி காலைப் பூமியின் மீது ஊன்றியும், கிரீடம் ஆகாசத்தை ஒட்டிக் கொண்டிருக்கும் படியும், நாண் ஒலியால் பாதாளத்தைக் கலக்கியும், திக்குகளி லெல்லாம் வியாபித்திருக்கின்ற ஒரு ஆயிரம் கைகளோடு கூட இருந்த அந்தத் தேவியை அவன பார்த்தான். உடனே தேவியும் அஸுரர்களும் ஒருவரை யொருவர் பிரயோகித்த அஸ்திரக் கூட்டங்களால் பல திக்குகள் பிரகாசிக்கும்படியான ஒரு பெரிய யுத்தம் உண்டாயிற்று. மஹிஷாஸுரனுடைய சேனாதிபதிகளான சிக்ஷுரன் என்ற மஹா ஸுரனும், சாமரன் என்ற மஹாஸுரனும் சதுரங்க சேனையோடு கூட யுத்தம் செய்தார்கள். அறுபதினாயிரம் தேர்களோடு கூடிய உதகரன் என்ற மஹாஸுரனும், ஒரு கோடி தேர்களோடு கூடிய மஹாஹனுவும் யுத்தம் செயதார்கள். ஐந்து கோடி தேர்களோடு அஸிலோமா என்ற அஸுரமுக்கியனும் அறுபது லக்ஷம் தேர்களோடு பாஷ்கலனும் யுத்தம் செய்தார்கள். உக்ரதாசனன் அனேகாயிரம் யானைப் படை, குதிரைப் படை இவைகளோடு கூடின ஒரு கோடி தேர்களால் சூழப்பட்டு யுத்தம் செய்தான். பிடாலன் என்ற மஹாஸுரன் ஐந்து லக்ஷம் தேர்களோடு கூடிய அவ்வளவு மற்றப் படைகளோடு சூழப்படடு யுத்தம செய்தான். மற்ற மஹாஸுரர்களும் பதினாயிரம் பதினாயிரம் தேர் யானை, குதிரைகளால் சூழப்பட்டு தேவியோடு யுத்தம் செய்தார்கள். மஹிஷாஸுரன் அந்த யுத்தத்தில் கோடி கோடி ஸஹஸ்ரஸங்கியைகளான ரத, அசுவ, கஜங்களால் சூழப்பட்டு நின்றான். அவர்கள் எல்லோரும் தோமரம், பண்டி பாலம், சக்தி, முஸலம், கட்கம், பரசு, பட்டசம் இவைகளைக் கொண்டு தேவியோடு யுத்தம் செய்தார்கள். சிலர் சக்தி (வேல்) யைப் பிரயோகித்தார்கள். சிலர் பாசக் (கயிறு) வீசினார்கள். சிலர் தேவியை

வாள் கொண்டு வெட்டிக் கொல்வதற்கு முயற்சித்தார்கள். அந்தத் தேவி யோ, விளையாட்டாகத் தன்னுடைய சாஸ்திர மாரியால் அந்த எல்லா சஸ்தி ராஸ்திரங்களையும் முறித்து விட்டாள். (49-68)

அந்த ஈசுவரியான தேவி முகத்தில் வாட்டமில்லாமல் தேவரிஷிகளால் ஸ்துதி செய்யப்பட்டு அஸுரர்களுடைய சரீரங்களில் சஸ்திரஸ்திரங்களைப் பொழிந்தாள். தேவியினுடைய வாஹனமான அந்த சிங்கமும் தன் பிடரி ரோமத்தை அசைத்துக் கோபித்து காட்டுத் தீப்போல அஸுரஸைந்யத்தினிடையில் சென்றது. யுத்தத்தில் தேவியினால் விடப்பட்ட நிச்வாசம் (பெருமூச்சு) உடனே நூறாயிரம் நூறாயிரம் கணங்களாயின. தேவியின் சக்தியி லிருந்து உண்டான அவர்கள், பரசுபிண்டிபாலம், வாள், பட்டாக்கத்தி இவைகளால் அஸுரக் கூட்டத்தைக் கொன்றுகொண்டே சென்றார்கள். சில கணங்கள் அந்த யுத்த மஹோற்சவத்தில் பேரிகைகளை அடித்தார்கள். சிலர் சங்கம் ஊதினார்கள். மற்ற சிலர் மிருதங்கம் அடித்தார்கள். தேவியும் திரிசூலம், கதை, சரவர்ஷங்கள், வாள் முதலானவைகளைக்கொண்டு மஹா தைத்யர்களை நூறு நூறாகக் கொன்றாள். சில அஸுரர்களை மணிநாதத்தால் மோஹிக்கச் செய்து கொன்றாள். வேறு சிலரைக் கயிற்றினால் கட்டி பூமியில் தள்ளிக் கொன்றாள். சிலரைக் கூரான வாளினால் வெட்டி இரண்டாக்கினாள். வேறு சிலரைக் கதையினால் அடித்துப் பூமியில் போட்டாள். வேறு சிலர் உலக்கையடிபட்டு ரத்தத்தைக் கக்கினார்கள். சிலர் சூலத்தால் மார்பு பிளக்கப் பட்டு பூமியில் விழுந்தார்கள். யுத்த களத்தில் நிரந்தரமான சரவர்ஷத்தால் அனேக அசுரர்கள் பிராணன்களை விட்டார்கள். சிலருடைய கைகள் முறிந்தன. சிலருக்குக் கழுத்துகள் முறிந்தன. சிலர் தலை பூமியில் விழுந்தது. சில பேருடைய நடுவு பிளக்கப்பட்டது சிலர் கணுக்கால் முறிபட்டு விழுந்தார்கள். வேறு சிலர், ஒற்றைக்கண்ணும் ஒற்றைக்காலு முள்ளவர்களாக தேவியால் இரண்டாகப் பிளக்கப்பட்டனர். சிலர் சிரஸ்ஸுகள் முறிக்கப்பட்ட கபந்தங்களாக மறுபடி எழுந்திருந்து பல ஆயுதங்களோடு கூடத் தேவியோடு யுத்தம் செய்தனர். தலை முறிந்துபோன சில கபந்தங்கள் கையில் வாள், சக்தி, சூலம் இவைகளை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் வாத்ய தாளங்களுக்குத் தகுந்தாற்போல் ஆடின. மற்ற அஸுரர்கள் தேவியை நில்லு, நில்லு என்று சொன்னார்கள். அந்த மகாயுத்தம் நடந்த இடம் பூராவும் தேர், யானை, குதிரை, அஸுரர்கள் இறந்து கிடந்ததால் நடமாடக் கூடாததாக யிருந்தது. அந்த அஸுரப்படையின் நடுவில் கூட அஸுரர்களுடையவும் யானை, குதிரைகளுடையவும் அதிகமான இரத்தம் ஒரு நதி போல் ஓடினது. அந்தப் பெரிய மஹா ஸைன்யத்தை தேவீ, மரங்களும் புல்களும் அடர்ந்த காட்டைக் காட்டுத்தீ நசிப்பிப்பதுபோல நசிப்பித்தாள். அந்த ஸிம்மமும் தன் கேஸரங்களை சிலிர்ப்பித்துக்கொண்டு பெருத்த குரலில் கர்ஜித்துக்கொண்டு அஸுரர்களுடைய சரீரத்திலிருந்து பிராணன்களைப் பிரிக்கிறதோ என்று தோன்றும்படி ஸஞ்சரித்தது. தேவியின் கணங்களும் தேவர்கள் புஷ்ப வர்ஷம் செய்து தேவியை ஸ்துதிக்கும்படி அந்த அஸுரர்களோடு யுத்தம் செய்தன. இது ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் ஸாவர்ணி மன்வந்தரத்தில் தேவீ மாஹாத்மியத்தில் (2) எழுபத்தொன்பதாவது அத்தியாயம்.

---

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.



(தொகுதி 21. பகுதி 1. 30-ம் பக்கத் தொடர்ச்சி.)

## அதிகாரம்—2.

### பொருள் நூலும், மற்ற சாஸ்திரங்களும்.

ஆல்பர்ட் மார்ஷல் எனும் பேரறிஞர் கூறுவதன்படி பொருள் நூல், சமூகத்தில் மாந்தர்கள் எங்ஙனம் பொருளாதாரத் துறையில் வாழ்க்கையை நடத்துகிறார்கள் என்பதையே கவனிக்கிறது. அங்ஙனம் மனிதர்கள் வாழ்க்கையை நடத்துவதில் அவர்களுடைய பொருளாதாரக் கருத்துக்களும் எண்ணங்களும் பொருள் நூலுக்கு முக்கியமாக இருக்கின்றன. ஆனால் அந்தப் பொருளாதாரக் கருத்துகள் பணத்தினால் மதிப்பிடக்கூடும்: அளவிடலாகும்.

பொருள் நூல் ஏனைய பெரிய சாஸ்திரங்களைப்போல் சில முக்கிய விதிகளைக் கொண்டிருக்கிறது. அவற்றை நாம் பொருளாதாரச் சட்டங்கள் (Economic Laws) என்று சொல்கிறோம். ஒரு சமூகத்திற்கு எப்படி சட்டங்கள் ஜீவனாக இருக்கிறதோ அப்படியே பொருள் நூலுக்கும் சட்டங்கள் இருக்கின்றன. அவை சில விஷயங்களைப் பின்பற்றியே நிற்கும். சில விஷயங்கள் சரியாக இருந்தால் (Other things being equal) பொருளாதாரச் சட்டங்கள் உண்மையான விஷயங்களை அறிவிக்கும். உதாரணமாக ஒரு பொருளின் விலை அதிகமாயிருந்தால் அதை வாங்குபவர்கள் சிலரே இருப்பார்கள். விலை குறைக்கப்பட்டால் வாங்குபவர்கள் ஏராளமாக இருப்பார்கள். இந்த உண்மை சந்தர்ப்பங்களை அநுசரித்தே இருக்கிறது. ப்ரொபஸர் ஆல்பர்ட் மார்ஷல் அவர்கள் பொருளாதாரச் சட்டங்களைப் பற்றிச் சொல்லுகையில், "பொருளாதாரச் சட்டங்களை அலைகள் ஏற்படும் சட்டங்களுக்கு ஒப்பிடவேண்டும்" என்கிறார். சமுத்திரத்தில் அலைகள் அதிகமாக எழுவதற்கும் குறைவதற்கும் சில விஷயங்கள் உள. அவை இன்றேல் அலைகள் சரியானபடி எழுவதற்கோ குறைவதற்கோ முடியாது. அதேமாதிரிதான் பொருளாதாரச் சட்டங்களும். பொருளாதாரச் சட்டங்கள் பணம் எனும் மதிப்புக் கோலினால் அளக்க முடியும்.

தற்காலப் பொருள் நூல் ஏனைய சாஸ்திரங்களுக்குச் சம்பந்தப்பட்டது. ஒரு சாஸ்திரத்தில் ஏதாவது புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் விஷயம் பொருளாதார நூலையும் பாதிக்கின்றது.

## பொருள் நூலும் அரசியல் நூலும்

பொருள் நூலும் அரசியல் (Politics) நூலும் சமூக சாஸ்திரங்களே. ஆதலின் இவை ஜனசமூக சாஸ்திரத் (Sociology) தின் பிரிவுகளே ஆகும். செல்வத்திற்கும் மனிதனுக்கும் என்ன சம்பந்தம் என்பதைப் பொருள் நூல் ஈகோனமிக்ஸ் கூறுகிறது. அரசியல் நூல் அரசாங்கத்தைப் பற்றிச் சொல்லுகிறது.

தற்காலத்தில் ஒரு சர்க்காரின் செய்கைகள், ஒரு தேசத்தின் அல்லது உலகத்தின் பல தேசங்களில் வாழும் மனிதர்களுடைய பொருளாதார நிலைமையை பாதிக்கும். இது உண்மையே. உதாரணமாக இந்திய சர்க்கார் அயல்நாட்டுச் சாமான்களுக்கு இறக்குமதி வரிகள் இல்லை என்று ஒரு அறிக்கையை வெளியிட்டால், இந்தியாவுக்குச் சாமான்கள் அனுப்பும் தேசங்கள் அதிகமான சாமான்களை அனுப்ப முயற்சிக்கும். அதனால் இந்தியாவின் பொருளாதார நிலைமையில் ஒரு மாறுதல் ஏற்படும்.

(2) ஒரு தேசத்தின் சர்க்கார் சாமர்த்தியமாகவும் வன்மையாகவும் காரியங்களைச் செய்தால், அந்த தேசத்தில் செல்வம் உண்டாக்குதலும் (Production) அதைப் பங்கிடுதலும் (Distribution) நேர்மையான நெறியில் சிறந்து வளரும். சர்க்காரின் மனப்பான்மையை யநுசரித்தே பொருளாதார விஷயங்களும் இருக்கும்.

## பொருள் நூலும் சரித்திரமும்.

பொருள் நூலின் வளர்ச்சிக்கு இன்றியமையாதது சரித்திரத்தின் ஒரு பகுதியான பொருளாதார சரித்திரமாகும். அதை ஆங்கிலத்தில் (Economic History) என்பர். பொருளாதாரக் கொள்கை (Economic Theories) களைச் சரியான வழியில் ஆராய்ந்து பார்க்கப் பொருளாதார சரித்திரம் உதவி செய்கிறது. உதாரணமாக பிரான்ஸ் தேசத்தில் காகிதப் பணம் எப்படி நடைபெற்றது. அது எந்த விதத்தில் அத்தேசத்தின் பொருளாதார நிலைமையை மாற்றியது எனும் விஷயம் மற்றொரு நாட்டின் சர்க்காருக்கு ஒரு படிப்பினையாக ஏற்பட்டு, அந்த சர்க்காரின் பொருளாதாரக் கொள்கைகளில் சில முக்கிய மாறுதல்களைக் கொண்டுவரலாம். கூலிகள் நிதிக்கொள்கை (Wages Fund Theory) முன்பு ஒரு காலத்தில் முதன்மை பெற்றிருந்தது. ஆனால் இப்பொழுது அக்கொள்கை பல நாடுகளில் கண்டிக்கப்பட்டது. இப்போது இக் கொள்கையை ஆதரிப்போர் இல்லை என்றே சொல்லலாகும்.

(2) புதிதான பொருளாதாரக் கொள்கைகள் தற்பொழுது ஏற்படுவது பொருளாதார சரித்திரத்தை ஆராய்ச்சி செய்த பின்னரே என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். உதாரணமாக தற்கால நூதன யந்திரங்கள் கூலிகளைப் பாதிக்கின்றன. பொருளாதாரச் சரித்திரம் இன்றேல் பொருள் நூல் இல்லை.

## பொருள் நூலும் நீதி சாஸ்திரமும் (Ethics).

பொருள் நூலை ஒரு சாஸ்திரம் என்று கருதினால், அது பொருளாதார விஷயங்களில் எத்தகைய நீதிகளுக்கு உட்பட்டு இருக்கிறது என்பது தெளிவாகும். மனிதன் செல்வத்தை உற்பத்தி செய்வதிலும், அதை ஜனசமூகத்

தில் பங்கிடுகையிலும் கூலி கொடுப்பதிலும் எத்தகைய நீதியைக் கடைப்பிடித்து ஒழுகுகிறான் என்பது கவனிக்கத்தக்க விஷயம். கூலியைக் கொடுப்பதில் நீதி விதிகள் முக்கியமாக இருக்கின்றன.

(2) செல்வத்தைப் பங்கிடுகையில் அது நீதிநெறிகளைப் பின்பற்றினதாக இருக்கவேண்டும். ப்ரோபசர். செலிக்மென் எனும் பொருளாதார நிபுணர், "பொருள் நூல் நீதி நூலைப்போல் ஒரு சமூக சாஸ்திரமே (Social Science) ஆதலால் ஒரு பொருளாதாரச் செய்கையானது வெகு நாளுக்குப் பிறகு ஆராய்ச்சி செய்யப்பட்டால் அது நீதியைத் தழுவியதாகவே இருக்கும்" என்று சொல்லுகிறார்.

ஈகோனமிக்ஸ் என்று சொல்லப்படும் பொருள்நூல் மற்றும் கணிதம், மனதைப்பற்றி உரைக்கும் நூல், உடலைப்பற்றிப் பேசும் நூல், சமயம் மற்றும் பல நூல்கள் ஆகியவற்றோடு சம்பந்தம் கொண்டுள்ளது. அதைப் பின்வருமாறு எழுதலாம்.




(தொடரும்.)





# விவசாயத்தின் சிறப்பு.

---

வேளாண்மையிற் சிறந்து விளங்குமொரு நாட்டில் வறுமை யறவே யொழியும். வறுமை யொழியின் மனிதர்கள் தீய வழியிற் றங்களது அறிவைச் செலுத்தார். நற்றுறைகளிலேயே ஒழுகி வருவாராவர். அப்பொழுது அவர்களது அறிவு விளக்கமுறும். அறிவு விளக்கமுறின், நாட்டிற்கு நன்மை பயப்பனவும், பெருமை கொடுப்பனவும், நவீனமுமாகிய பலவற்றை இயற்றவும், கண்டு பிடிக்கவு மியலும். அதன் வழி, நாடு ஏனைய நாடுகளைவிட எத்துறைகளிலும் முதன்மை பெற்று விளங்கமுடியும். அந்நாட்டினற்கு, எங்கு செல்லினும் சீரும் சிறப்பும்தானே வந்தடையு மென்பதில் யாதொரு ஐயமுமின்று. நம் பாரத நாடாகிய இந்தியா நாடு தற்பொழுது வறுமையுற்று பிறநாட்டிற் கடிமைபூண்டு, எங்கு செல்லினும் இந்தியர்களென்றால் "அடிமைகள்" என்னு மிழிவுபட்டத்திற்கு முன்னாகி நிற்பது, நாம் வேளாண்மை யென்னும் அச் செல்வத்தைத் தாளாண்மை பூண்டு விளக்கமுறச் செய்யாததினாலேயே. ஆங்கிலமென்னும் பிறமொழியின் மோகவலையில் வீழ்பட்டு நம் நாடாகிய தாய்க்குச் செய்ய வேண்டிய தொண்டினைக் கவனியாது விடுத்தனம். இப்பொழு ததன்பயனைத் தாங்க வியலாது தவிக்கின்றோம். ஏனைய நாட்டார் நம்மை நோக்கி எள்ளனஞ் செய்யச் சகித்திருக்கின்றோம். வறுமையினால் வாடுகின்றோம். வறுமை நோய்பிடித்து வாட்டும் ஒருவனுக்கு யாது செய்யமுடியும்? ஒன்றுமியலாது. ஒருகால் ஒரு பெரியார், "நம் நாட்டிலுள்ள அநேக லக்ஷம் மனிதர்கள் எங்ஙனம் ஒருங்கெழ முடியும்? எங்ஙன மவர்களுக்கோர் வலிமையுண்டாகும் அவர்கள் பட்டினி கிடக்கும்பொழுது?" என்று மொழிந்துள்ளார். அது பொன்னேபோற் போற்றும் மொழியன்றோ! இப்பொழுது, நாம் வேளாண்மையைக் கவனியாதுவிட்டதின் பயனாய், நம் நாட்டில், உண்ணப் போதுமான தானியமின்றி, வெளி நாடுகளிலிருந்து வரவழைக்கின்றோம். ஒவ்வொரு பிடிச் சோற்றிற்கும் நாம், வெளி நாட்டு மரக்கலங்களை வழி பார்த்து நிற்கின்றோம். வெளி நாடுகளி லிருந்துவரும் தானியம் நின்று விடவோ அன்றிச் சற்றுத் தாமதித்து வரவோ செய்யின், அதுவரை நாம் பட்டினி கிடக்கவேண்டியதுதான்.

பிறமொழியின் வலையில் வீழ்பட்டு "அதைப் பயிலின் நிரம்பப் பொருள் திரட்டலாம்" என்று பகற்கனவு கண்டு, வீடு, நிலம் முதலியவைகளையும் விற்

றுப் படித்து (பி.ஏ., எம். ஏ.) முதலிய பட்டம் பெற்ளும். ஒருவர் இரு வரா? நம் நாட்டின் பெரும் பகுதியினரு மங்ஙனமே. அவை இப்பொழுது சோறுபோடுகின்றனவோ? பிறமொழிக்குரியராகிய மேனாட்டார் யாது கூறு கின்றனர்? "நீங்கள் படித்துக் கல்லூரிப் பட்டம் பெற்றிருக்கிறீர்கள். உண் மையே. யாங்கள் யாது செய்வோம்? எங்கு நோக்கினும் வேலை இல்லாத் திண்டாட்டம் முனைந்து நிற்கின்றது. யாது செய்யவியலும்? ஆகையால் சோதரர்களே! இப்பொழுது நீங்கள் செய்யவேண்டுவ தென்னவென்ளுல், நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டமும், வறுமைப் பேயும் தலைகாட்டா தொழியும் பொருட்டு உழவுத் தொழிலாகிய வேளாண்மையைப் பெருக்குங் கள்" என்று புத்திமதி கூறுகின்ளுர்கள். இம்மொழிகளைக் கேட்கும் பொருட் டுத்தான் கல்லூரிகளில் பணத்தைக் கொட்டிக் கொட்டி பட்டம் பெற்ளும் போலும். ஆம் ஏனென்ளுல், அவர்கள் கூறுவது ஆங்கிலத்திலன்ளே. அதைப் பயிலாவிடின் அதெவ்விதம் விளங்கும்? அவர்கள் கூறுவது இன்ன தென்று விளங்கும் பொருட்டே பணத்தைக் கொட்டிப் படித்தோம்.

"கழிந்ததைக் கனவிலுங் கருதாதே" யென்பதற் கிணங்க, நாமினியா வது கண்விழித்துச் செய்வனவற்றைச் செவ்வனே செய்து, வேளாண்மை யைப் பெருக்கி, வறுமையைத் துரத்தி, அடிமையை யகற்றி, அன்னையை (நம் நாட்டை) அகமகிழச் செய்து அவளது ஆசியும் அருளும் பெறுவோமாக.

"சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனுல்
உழந்தும் உழவே தலை,"

"உழுவார் உலகத்தார்க்கு ஆணியஃது ஆற்ளுது
எழுவாரை யெல்லாம் பொறுத்து."

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற்று எல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்."

"பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்"

"இரவார் இரப்பார்க்கு ஒன்றுஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்."

"உதவினுர் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டோம்என் பார்க்கு நிலை."

என்னும் பொய்யாமொழியைப் பொய்யாக்காது வேளாண்மையைப் பெருக்கி யின்புறுவோமாக.






# ஔவையார்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

இனி, "நெற்பயிர் விளை" என்றருளினர். இதற்கு நெல்லின் பயிரை நீ வேண்டிய முயற்சி செய்து பயிரிடு என்பது பொருளாகும்.

பல்வகையான தானியங்கள் நம் நாட்டில் விளைகின்றன. அவைகளைப் பற்றி ஈண்டு குறிப்பிடவில்லை. நமது ஔவையார் செஞ்சாலி விளையும் நீர் புனற் சோணாட்டிலேயே வதிந்தவரல்லர். புன்செய் வளமும் கெழுமிய நடு நாட்டிலதான் மிகவும் பயின்றவர். எனினும் விளை பொருள்களுள், தரத்தில் உயர்ந்தது நெற்பயிரே யென்பது மறுக்க முடியாது. பண்டைப் புலவர் பெருமககளும் செஞ்சாலியுடைய நாடுகளையே தெய்வத் திருநாடுகளெனப் புகழ்ந்து போற்றிவந்தனர். அத்தகைய நாடுகளை யாண்ட மன்னர்களே எல்லா வகையிலும் மேம்பட்ட திருவாளர்களாக விளங்கினர். நெற்பயிர் விளையும் நிலங்கள் எப்போதும் நீர்வளமிக்குடையதாயிருத்தல் வேண்டும்; நீர் வளமிகுந்த எந்த நாடும் பல்வளங்களிலும் செழிப்புற்று கண்டோர் மனதைக் கவரும.

தவிர மக்களுக்கு நெல்லுணவு அறிவுப் பெருக்கினை வளர்ப்பதுபோல் புன்செய் விளைபொருள்களின் உணவு செய்யமுடியாது. அவைகளின் குணம் சரீரவன்மை புத்தி மந்தம் இவைகளையே உண்டுபண்ணுமென்பது தியல்பு. இககாரணம் பற்றி நெல்லின் அரிசியாலாகிய அன்னத்தையே தெய்வதாராதனம் செய்யவேண்டு மென்பது விதியாக நடைபெற்றுவருகிறது. சத்துவ ஆகாரம் நெல் என்பது மட்டில் அல்லாமல் விவசாயிகளைத் தரதில் உயர்த்துவதும அதுவேயாதலினால் நெற்பயிரை அலட்சியம் செய்யாமல் முயற்சி செய்து விளைவி என்றனர் போலும்.

முன்பொருகால் மூதாட்டியார் சேரமானை வாழ்த்துகையில் வரப்புயர என்று கூறி ஆசீர்வதித்தார். மற்றும் அங்கு வந்திருந்த புலவர்கள் தாங்கள் கட்டுக் கட்டாகப் பிரபந்தங்களைப் பாடிக்கொண்டு வந்திருக்க, இம்மூதாட்டியார் அரச சபையின் மரியாதையையும் கருதாமல் வரப்புயர என்ற ஒரே மொழியில் வாழ்த்துகின்றாரே எனத் திகைத்தனர். சுருங்கச் சொல்லி விளங்கவைப்பதில் தனககிணை வேறில்லாத நம் தலைவியார் அவர்கள் குறிப்பினை யுணர்ந்து வரப்புயர என்பதையே திரும்பத் திரும்ப மும்முறை கூறி விட்டு "வரப்புயர்ந்தால் நீருயரும், நீருயர்ந்தால் நெல்லுயரும்; நெல்லுயர்

தால் குடியுயரும்; குடியுயர்ந்தால் முடியுயரும் என்பதே எனது வாழ்த்துரையின் சாரம் ஆகும். இதைவிட அரசருக்கு ஆக்கம் தருவது வேறுண்டாயின் நீவிர் கூறுவீராக" என்று தெளிவித்தனர் என்பது சரித வரலாறு. இதனால் மூதாட்டியாருக்கு குடிகளைச் செல்வவான்க ளாக்குவதும் அவர்களால் அரசர்களை மேன்மையுடையராக்குவதும் நீர் நிறைந்த வரப்புகளில் விளையும் நெற்பயிர்தான் காரணமென்பது கருத்து. புன்செய்விளையும் புனங்களில் பிறவாமல் நன்செய் விளையும் நீர் நாட்டில் பிறப்பது பழம் புண்ணிய முடையார்க்கே வாய்க்கும் என இராஜ கூடப்ப கவிராயரும், "நீர் நாட்டில் வரல் அரிது கண்டாய்" என்றருளினர். தவிர நீர் நிறை வயல்களில் மச்சங்கள் முதலிய ஜல ஜந்துக்கள் இருப்பது இயல்பு. இந்த மச்சங்களே தண்ணீரிலுள்ள இயற்கைக் குற்றங்களையும் வயலின்கண் தண்ணீரின் தேக்கத்தால் ஏற்படும் செயற்கை (அசுத்தங்கள்) குற்றங்களையும் உணவாகக்கொண்டு நீரையும் நிலத்தையும் தூய்மையாக்குகின்றன வென்பது திண்ணம். அதனாலும் நிலவளம் உயர்கின்றது. நீர்வளம் நிலவளம் உடைய நாட்டிற் பிறந்தோ இளமை முதல் வளர்ந்தோ வரும் இளைஞர்களின் முக வசீகரமும் சுறுசுறுப்பும் விவேகப் பொலிவும் அந்நீர் வளமில்லாத சிற்றூர்களிலும் காட்டிலும் மேட்டிலும் பிறந்து வாழ்ந்து வெளிவரும் இளைஞர்களின் தோற்றத்தில் காணமுடியாது. இது சாதாரணமாக எவரும் உணர்ந்ததே. பெரும்பாலும் நமது தென்னாட்டில் காவிரி நீரைப் பருகி மூழ்கி வளரும் வாலிபர்களைக் காணும்போதே மேலே கூறிய வசீகரம் பொலிவு விவேகம் இவைகள் மனதைக் கவரும் தன்மையில் விளக்க மடைகின்றன.

தாம்பிரபருணி நீரினைப் பருகியும் மூழ்கியும் திளைத்தும் உள்ளோர் நோயற்ற யாக்கையும் திட சரீரமும் அஞ்சா நெஞ்சமும் அவர்கள் தோற்றத்தில் கூறாமலே விளங்கும். இவ்வண்ணம் ஒவ்வொரு நீரின் தன்மைக்கேற்ப மக்கள் இயல்பும் மாக்கள் இயல்பும் அமைந்துள்ளதாதலின், அத்தகைய புனிதமான நீரிலேயே விளையக்கூடிய நெற்பயிர் சிறந்த நற்குணங்களை உண்டுபண்ணும் நல்லுணவாகும். எனவே, அத்தகைய பயிரை முயன்று பயிரிடுமாறு பணித்தனர். நீர்வளமே கிட்டாத இடங்களில் உள்ள மக்கள் எப்படி நெற்பயிர் விளைவிக்கலாம் என்னும் வினா வெழும். அவர்கள் தங்கள் நிலத்திற்கேற்ற பயிர்களை விளைவிக்க வேண்டியதுதான். ஔவையாரே ஒரு சமயம் இதன் அருமையை நோக்கி,

> 'ஏரு மிரண் டுளதாய் இல்லத்தே வித்துளதாய்
> நீர்அருகே சூழ்ந்த நிலமுளதாய்."

என்று கூறியிருப்பதால் மேற்கண்ட வசதிகள் உள்ளவர்களுக்கே நெற்பயிர் விளைவிப்பது சாத்தியம். வசதியான இடங்களில் வாழும் பேறுடைய மக்களிலும் சிலர் முயற்சிக்குறைவால் நல்ல பலனையடைவதில்லை. இத்தகையார்கட்கே மூதாட்டியார் இடித்துக் கூறியதாக சிறப்பாகவும் கொள்ளலாம். 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கு மிரா'தென்பது ஒரு பழமொழி. இது உண்மையே. விவசாயி தனக்கு மீதி ஏற்படவேண்டுமென்னும் ஆசை கொண்டு கணக்கிடத் தொடங்கினால் அவனிலும் அறிவீனன் வேறிருக்க முடியாது. இவன் உழுதொழில் வருவாயினால் கிராமத் தொழிலாளிகள் கடமைகளும் பொதுத் தருமங்களும் பெரிய அரசாட்சியும் வாணிபமும்

வாழ்ந்துவருகின்ற தென்பதை எவரும் மறுக்க முடியாது. அரசர்கள் முன்னிலில் வேளாண்மை செய்பவர்களுக்கே அவைகளில் பெரு மதிப்புச் செய்து வந்தனரென்பது சரித்திர உண்மை. உக்கிரகுமார பாண்டியன் மேகங்களைச் சிறை செய்தான்; இந்திரன் வேட்கைப்படி அவைகளை விடுதலை செய்யப் பிணை (ஜாமீன்) நின்றவர் வேளாண்மையாளர் ஒருவரே என்பது திருவிளையாடற் புராண வரலாறு. இத்தகைய மேன்மை உழவுதொழில் ஒன்றினுக்கே யுரியது. அத்தகைய தலையான பெருமையைப் போற்றி மகிழாமல் பயிர்த் தொழிலில் லாபம் கிடைக்கவில்லையே யென அத்தொழிலை யிகழ்ந்து முயற்சி செய்யாமல் மாத நிவேதனம் பெறும் ஊழிய வர்க்கத்தில் நுழைய வழி பார்க்கும் தற்கால யுவர்களின் புத்திப்போக்கிற்கு இது நல்ல பாடமேயாகும். தற்கால அரசியலில் விவசாயிகளின் மதிப்பு சிறிதும் கவனிக்கப்படாமல் அவர்கள் நொந்து மெலிந்து வாடுவதால் அத்தொழிலை மேற்கொள்ளத் தயங்க வேண்டியதும் ஒரு வகையில் நியாயமே. ஆயினும் உலகத்தையே திருத்தி செழிப்புறச் செய்யும் தீவிரமான ஆலோசனை நிபுணர்கள் எல்லாம் ஒரேமுகமாக நிலங்கள் சாகுபடி செய்யப்படும் கிராமங்களே வறுமைப் பிணி தீர்க்கும் வயித்திய சாலைகளென வற்புறுத்தத் தலைப்பட் டிருக்கின்றனர்.

சுற்றிச் சுற்றி வந்தாலும் சுங்கம் சாவடி வழியாகத்தான் வரவேண்டும் என்ற முதுமொழிப்படி பல துறைகளிலும் துருவித் துருவி தூரதிருஷ்டிக் கண்ணாடி கொண்டு பார்த்தாலும் முடிவில் உழுவான் தலைக்கடைக்கே வந்து நிற்கவேண்டும். "மேழிச் செல்வம் கோழைபடாது" என்பது அருள்மொழி. ஆதல் பற்றியே அன்னையார் 'நெற் பயிர்விளை' எனச் சிறப்பாக எடுத்துக் கூறினார். தவிர நெற்பயிரினால் (பூஸாரம்) பூமியின் சத்து குன்றாது. ஏனைய புன்செய்ப் பயிர்களினால் பூமியின் இயற்கைச் சத்தும் குறையும். எல்லாவகைகளினாலும் நெற்பயிர் விளைப்பதின் முக்கியம் மறுக்க முடியாதது. இனி,

"நேர்பட ஒழுகு"

என்பதாகும்.

இது நீ உனது ஒழுக்கம் கோணாமல் செவ்வையாக நட என்று உணர்த்தியதாகும். கோணாமல் நடப்பது இன்னதெனத் தெரிந்தவர்களும், பிறருக்கு போதிப்பவர்களும் நாட்டில் பெரும்பான்மையினர்களே. எனினும், பிறருக்குப் போதிப்பதுபோலத் தாமும் நடப்பவர்களே அரியராவர். அதில் ஒரு சிலர் நேரலாமோ யாதோ ? கூற அஞ்சுதும். இது பற்றியே பொய்யாமொழிப் புலவர் பெருமானும்,

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்"

என்றருளி யுள்ளார். எவரும் வானளாவ நீதிகளைப் பேசுவதைவிடச் செய்கையில் கைக்கொண்டு ஒழுகப் பயிலுதல்வேண்டும். இவ்விதம் கோணாமல் நடக்கும் உறுதி உபாத்திமைத் தொழில் புரிவோர்களிடம் அமைந்திருத்தல் வேண்டும். அவர்கள் திண்ணிய ஒழுக்குள்ளவர்களாயின் மாணாக்கர்களும் அவ்வழியைப் பின்பற்றுவர். தமக்குத் தேவையான புகையிலைப் பொடிக்காகவும் வெற்றிலைபாக்குகட்காகவும் தலைமையான மாணாக்கர்களைக் கடைக்கனுப்பும் ஆசிரியர்கள் எத்தனை எத்தனை ?

எல்லாக் கடமைகளிலும் ஆசிரியக் கடமை மிகமிகச் சிறந்தது. அத்தகைய பெரும் பொறுப்பமைந்த தொழில் தற்காலம் சில பாட புத்தகங்களையும், பல அமைப்புத்திட்டங்களையும் பயிற்றுவிப்பதற்கே ஏற்றதெனக் கருதப்பட்டு நடைமுறையில் கையாளப்பட்டும் வருவது கண்கூடு. உபாத்திமைத் தொழிலிற்குப் பயிற்சி பெறுவதென்பதில் ஒழுக்கம் வேண்டுமென்னும் பகுதி முற்றிலுமில்லை. கோணாமல் நடக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமாயின் உபாத்திமைத் தொழிலுக்குச் செல்வோர் தொகை பெரும்பாலும் குறையுமென்பதில் ஐயமில்லை. நேர்பட ஒழுகப் பயிலாதவர்கள் போதிக்கும் குழுவினராக விருக்குங்கால் இளைஞர் நடை எவ்வாறு திருந்துவர். ஆவதும் அழிவதும் ஆசிரியர்களாலேயே என்பது தெளிவு. ஆதலினால் 'நேர்பட ஒழுகு' என்பது ஆசிரியர்களாக முன்வரும் யுவர்களையே முதன்மையாக நோக்கிக் கூறியதாகவும் கொள்ளலாம். நேர்பட ஒழுகவேண்டிய உறுதி இளமையிற் கால் கொண்டாலும் யௌவனம் வந்தடையும் கால் கடுங்காற்றி லகப்பட்ட மரக்கலம்போற் சிதருண்டு நிலை குலையச் செய்விக்கவல்ல நிகழ்ச்சிகள் அடுக்கடுக்காக முன்வந்து காட்சியளிக்கும்; அந்தச் சோதனையில் கலங்காமல் நேர்பட ஒழுகுந் தீரமே ஆண்மை. அவ்வாறொழுகக் கற்கும் கல்வியே கல்வி. பண்டை நாட்களில் உலக அநுபவ முதிர்ந்தவர்களே ஆசிரியர்களாகக் கொள்ளும் வழக்கமும் இருந்துவந்தது. வனவாசம் செய்து வறுமையை யேற்று மனைவியோடு வானப்பிரஸ்தாச்சிரமம் புரியும் முனிபுங்கவர்களே உலகாளவேண்டிய அரச புத்திரர்களுக்கும் குருமார்களா யிருந்தனர். அதனால் எளியவர் நிலைமை ஆடம்பரமற்ற வாழ்க்கை அடக்கவுணர்ச்சி இவைகள் அவ்விளைஞர் உள்ளத்தில் அரும்பி மலர இடமிருந்தது. தற்காலம் சொற்பனத்தில்கூட அத்தகைய உதாரணம் காண முடியாது. ஆதலினால் ஔவையார் அருள்மொழியைக் கருத்திற் கொண்டு ஒவ்வொரு விஷயங்களிலும் எச்சரிக்கையுடன் நேர்மையாக நடத்தல்வேண்டுமென்று உறுதி கொள்ளல்வேண்டும். அரிச்சந்திரன் ஒரு பொய் சொல்ல மறுத்து இடுகாட்டில் சுடலைச்சாம்பானுக்கு அடிமைப்பட்டதாக நம் நாட்டில் வழங்கும் சரித்திர வுண்மையை ஊன்றிச் சிந்திக்க வேண்டும்.

நளன் தான் காதலித்த தமயந்தியிடம் தேவர்கள் பொருட்டுத் தூது சென்றான். தசரதன் ஒரு மொழி மறுக்கக் கூசி உயிரையும் உயிரனைய காதல் மகனையும் துறந்தான். நச்சுப் பொய்கையில் இறந்த தம்பியர் நால்வரில் மாத்திரி புத்திரனாகிய நகுலனை முதலில் உயிர்ப்பித்துப் பிறகு தன் சொந்த தம்பியாகிய வீமனை உயிர்ப்பித்தான் தருமபூபதி.

ஆபத்து வந்த சமயத்தில் தான் மன நிலைகுன்றாமல் நேர்மையாக ஒழுகும் திறமையைக் கற்கவேண்டும். நேர்பட ஒழுகுவோர் என்றும் இறவாப் புகழுடம்பு பெற்றவராவர் அவர்கட்கு எந்தத் தீங்கும் புறங்காட்டும். எனவே ஒவ்வொருவரும் ஒவ்வொரு சமயங்களிலும் பிறருக்குப் பயந்து செய்யாமல் மனச்சான்றுக்காகவே நேர்வழியில் ஈடுபடக்கடவர். இனி,

"நைவினை நணுகேல்"

என்பது. இதற்கு, நீ கெடத்தக்க தீவினைகளை ஒருபோதும் சாராதே என்பது பொருள். இது முன்பு கூறிய நேர்பட ஒழுகென்னும் நீதியைக் கைக்கொள்ளுவதற்கு முக்கிய சாதனமாகும்.

உன் பெருமையை அல்லது நலத்தைக் கெடுக்கத்தக்க தீவினைகளை ஒரு போதும் சார்தல் கூடாதென்று கூறினால் செந்நெறியைத் தவிர வேறு சார் பில்லாமல் போகும். எனவே இரண்டு தொடர்களும் ஒன்றை யொன்று தொடர்வனவேயாகும். ஆதலினால் அடுத்துவரும்,

"நோய்ய வுரையேல்"

என்ற நீதியை ஆராய்வோம்.

இதற்கு பயனில்லாத அற்ப வார்த்தைகளை நீ சொல்லாதே என்று உணர்த்திய தாயிற்று.

இது மிகமிகப் பெரிய புத்திமதியாகும். இதில் பிழைபடாதவர்கள் இருப்பரோ வென்பதும் சந்தேகம். நமது தாயுமானவரும்,

"நெட்டுயிர்த் துத்தட்டழிந்
துளறுவார் வசன நிர்வாகரென்ற பேரும்"

என்று திட்டமாகக் கூறியருளினர்.

வடித்தெடுத்த சொற்களை நிறுத்துப் பேசும் வன்மையாளரும் ஒவ் வோர் சமயத்தில் தவறுதல் இயற்கை. செருக்கும் சினமும் பொறையுடை யாரையும் நிதானம் தவறும்படி செய்வதியற்கை. ஆயினும் அந்நிலையிலும் அற்ப வார்த்தைகளை அறிஞர் வழங்கார். இயல்பாகவே இழிந்த குணம் நடையுடையவர்களிடமே அற்பத்தனமான மொழிகள் பிறக்கும். உயர்ந்த நடையுடையவர்கள் வாயில் மறந்தும் இழிவான சொற்கள் வரமுடியாது. இக்குணம் பெரும்பாலும் இளமையிலும் பிறகும் தங்களுக்கு ஏற்படும் சகவா சத்தாலேயே ஏற்படுவதாகும். இது பற்றியே 'ஒருவன் குணத்தை அறிய வேண்டுமானால் அவன் நண்பனைப் பார்த்து அறிந்துகொள்' என்ற ஆங்கிலப் பழமொழியின் கருத்தும் எழுந்ததாகும். எப்போதும் கீழ்மக்களின் நட்பு தீய குணங்களையே வளர்க்கும். அற்பமான உரைகளை ஒருவன் வழங்கினால் அவ் வாறு வழங்குவோனையே அற்பமான மனிதன் என்று உலகம் மதிப்பது கண் கூடு. இவனால் நிந்திக்கப்பட்டவனை அவ்வாறு கருதாமல் அவன்பால் இரக் கமே கொள்வதும் இயல்பு. ஆதலினால் இவன் சொற்கள் தக்கோர் கொள் ளத்தகாத பயனற்றவைக ளாகின்றன. இது குறித்தே,

"நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளது மன்று"

எனப் புலவர் பெருமான் ஓதியருளினர். நாவைத் தூய்மைப்படுத்துவது உயர்ந்த பயனளிக்கும் செம்மொழிகளே யன்றிப் பயன் பயவாத அற்பமொழி களே யன்று. பெரும் பதவியில் நிற்பவர்களும் ஒரு சமயம் புன்மை மொழி களை வழங்கிப் பிறகு பொறைகோரி மன்னிப்புக் கோருவது உலகியல் அறி ஞர்களுக்குப் புதியதன்று. சில வருஷங்கட்கு முன் நமது இந்திய நாட்டின் அரசப்பிரதிநிதியாக விருந்த லார்டு கர்ஸன் என்னும் பிரபு நாவன்மையிலும், பரந்த கல்வியிலும் பேரறிவிலும் சிறந்தவர் என்பது எவரும் அறிந்த விஷ யமே. அத்தகைய மேன்மையாளர் முன்பின் நிதானியாமல் இந்தியர் பொய் யர் என்று பதட்டமாய் ஒரு மொழி கூறியருளினர். அதனாலேற்பட்ட மக்

# நாவலாசிரியை ஸ்ரீமதி எலினர்

இங்கிலாந்து தேசத்தின் பிரபல நாவலாசிரியைகளில் ஸ்ரீமதி. எலினர் கில்ன் என்பவரும் ஒருவர். அவரது சரித்திரம் இப்போது புஸ்தக ரூபமாக வெளியிடப்பட்டிருக்கிறது. அப்புஸ்தகத்துக்கு மதிப்புரை எழுதும் முறையில் ஸ்ரீ ஆர். கே. நாராயணன் என்பவர் அவ்வம்மையாரின் சரித்திரச் சுருக்கத்தை 'ஹிந்து' பத்திரிகையில் பின்வருமாறு எழுதியுள்ளார் :—

ஸ்ரீமதி. எலினர் கில்ன் முடக்குவாதத்தால் அவஸ்தைப்படாதிருந்தால் அவர் ஒரு ஆசிரியையாக வந்திருப்பாரோ என்பதும் சந்தேகமே. அவ்வம்மையார் மேற்படி வியாதியால் வருந்தியபோது அவர் மீண்டும் படுக்கையை விட்டு எழுந்திருப்பதும் அரிது என்று கூறப்பட்டது. இளமையிலேயே இறக்க மனமின்றித் தனக்கு ஏற்பட்டுள்ள வியாதியினின்றும் விடுபட வேண்டுமென்னும் உறுதிகொண்டார். தன் சிறு பிராயம் முதல் எழுதி வைத்துக்கொண்டே வந்த தினசரிக் குறிப்புக்களை எடுத்துப் படித்தார். தன் வாழ்க்கையைப்பற்றித் தானே சிரித்துக்கொண்டார். அதை மற்றவர்களும் படித்து இன்புறவேண்டுமென்னும் எண்ணங்கொண்டார். அதுவரையில் அவர், தான் புஸ்தகம் எழுதப்போவதாக நினைத்ததே இல்லை. அவர் தனது வாழ்க்கைக் குறிப்புகளை நன்கு திருத்திக் கட்டுரைகளாக எழுதினார். அம்மாதின் கணவன அக்கட்டுரைகளை அவரது நண்பராக இருந்த ஒரு பத்திரிகாசிரியரிடம் காண்பித்தார். அவரும் அவற்றை லண்டன் நகரில் வெளியாகும் ஒரு வாரப் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளியிடலானார். 1901ம் ஆண்டின் தொடக்கத்தில் ஜிரால்ட் டக்வொர்த் என்னும் நூல் நிலையத்தார் அக் கட்டுரைகளை ஒரு புஸ்தக ரூபமாக வெளியிட்டனர். அதற்கு அதிக கிராக்கி ஏற்பட்டது. ஆயிரக் கணக்கான பிரதிகள் விற்கப்பட்டன. தனது வாழ்க்கைக குறிப்புகளுக்கு இவ்வளவு மதிப்பு இருக்கிறதென்பதை அறிந்த

---

கள் மனக்கசப்பும், வங்கநாட்டினர் உள்ளக் கொதிப்பும் எத்தனை எத்தனை நடுக்குறச் செய்யும் விபரீதங்களைத் தோற்றுவித்தன? என்பதைச் சிறிது சிந்தித்துப் பார்ப்போமாயின் அக்கடுங்காற்றின் வேகவே இன்னும் வெவ்வேறாகிய உருக்கொண்டு காட்சி யளிக்கின்றன வென்பது புலனாகும். அத்துணைப் பெரிய பதவியாளருக்கே அற்ப மொழிகளை வழங்கியது இத்துணைத் தீமைகளை விளைவித்ததென்றால் சாமானியர்கள் திறத்தில் என்ன தீமையை விளைவிக்கும் என்பதைச் சிந்திக்கின் ஒளவையார் அருளிய "நொய்ய வுரையேல்" என்பதின் அருமையும் பெருமையும் விளங்கும்.

ஸ்ரீமதி. எலினர் சந்தேஷத்தின் மிகுதியால் மெய்ம்மறந்து தனக்கும் தெரியாமல் தன் படுக்கையினின்றும் குதித்தார். எப்படியோ அந்த வேகத்தில் அவ்வம்மையாரின் மூடக்குவாதம் மறைந்தது.

அன்றுமுதல் அவர் நல்ல நாவலாசிரியையாக விளங்கலானார். அவர் உலகின் பல பாகங்களிலும் சுற்றுப்பிரயாணம் செய்து பிரபல செல்வந்தர்கள், பிரமுகர்கள் முதலியவர்களுடன் நெருங்கிப் பழகிப் பல விஷயங்களையும் அறிந்துகொண்டு பல நூல்களை எழுதி முடித்தார். 'மூன்று வாரங்கள்' என்னும் அவரது இரண்டாவது புஸ்தகத்துக்கு ஏற்பட்ட கிராக்கி அளவிடற்கரியது. பலரும் அப் புஸ்தகத்தைச் சிலாகித்துப் பேசலாயினர். சாதாரணமாக ஸ்ரீமதி, எலினரின் புஸ்தகங்களைப் படிப்பவர்கள் அவை ஒழுக்கக் குறைவானவையா இல்லையா என்று விவாதிப்பது வழக்கம். எப்போதுமே எந்த புஸ்தகத்தைப்பற்றி அதிகமாக மக்கள் விவாதிக்கின்றனரோ அது அதிகமாகவே செலவாதல் சகஜம். இவ்வாறு அவ்வம்மையாரின் புஸ்தகம் விளம்பரமானதுமன்றி இயற்கையிலேயே அவரது காதற் கதைகள் எல்லா ஆடவர்களாலும் மாதர்களாலும் ஆர்வத்துடன் படிக்கப்பட்டன. காதலர்களிடையே நிகழக்கூடிய உண்மையான எல்லா விஷயங்களையும் அவர் தாக்ஷிண்யமின்றி அக் கதைகளில் புகுத்திவிடுவார். 1907ல் அவர் அமெரிக்காவுக்குச் சென்றார். அங்கே அவர் கப்பலிலிருந்து இறங்கு முன்னரே பல நிருபர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு அவர் அமெரிக்காவைப் பற்றியும், அந்நாட்டிலுள்ள விவாக விடுதலை முறையைப் பற்றியும் என்ன கருதுகிறார் என்பதுபற்றியும், அவர் அங்கு எவ்வளவு காலம் தங்குவார் என்பதுபற்றியும் பல கேள்விகளைக் கேட்டனர். இதனாலேயே அவரிடம் அமெரிக்கர்கள் அதிக மதிப்பு வைத்திருந்தார்கள் என்பது தெரிகிறதல்லவா? அவர் அமெரிக்காவின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்றார். 'கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு' என்பதுபோல் அவர் சென்றவிடங்களிலெல்லாம் மேதை மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். முரடர்களும் கொள்ளைக் கூட்டத்தாரும் வசிக்கும் பிரதேசங்களுக்கும் அம்மாது சென்றார். அங்கும் அவருக்குச் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. ஸ்காட்டி என்னும் கொள்ளைக்காரத் தலைவனும் அவ்வம்மையாரின் நூல்களை ஆர்வத்துடன் படிப்பவனாதலால் அவர் தன்னுடன் வந்து தன் விருந்தாளியாக இருக்க வேண்டுமென்று



ஸ்ரீமதி. எலினர்.

கேட்டுக்கொண்டான். ஆயினும் அவ்வம்மையார் அவ்வழைப்பை ஏற்றுக் கொள்ள இயலவில்லை.

1910-ம் வருஷத்தில் ரஷ்யதேசத்து ராஜவம்சத்தைச் சேர்ந்த தலைவி யின் அழைப்பின்மீது ஸ்ரீமதி எலினர் ரஷ்யாவுக்குச் சென்றார். அத்தேசத்தி லுள்ள பாமர மக்களின் நிலைமையைப்பற்றி எதையும் அறிய அவ்வம்மையா ரால் முடியவில்லை. ராஜமாளிகையின் விருந்தாளியாகச் சென்றதால் அவர் களாகக் காண்பித்ததைத தவிர வேறெதையும் பார்க்க முடியாமற்போயிற்று. அவ்வாறிருந்தும் ஒருநாள் காலை ஸ்ரீமதி எலினர் தன் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தபோது ஆண் பெண்களான சுமார் முப்பது பேரை ஒரு சிலர் சாட்டை கொண்டு அடித்துத் துரத்திக்கொண்டிருப்பதைக் கண்டார். அது என்னவென்று விசாரித்தபோது பாஸ் போர்ட் (அனுமதிச் சீட்டு) இல்லாமல் நகரத்தில் வந்து விட்டவர்களைத் துரத்தியதாக அறிந்துகொண்டார். பிறகு அம்மாது இனி ஜன்னல் வழியாகப் பார்க்கலாகாதென்று அறிவிக்கப்பட் டது. அந்தச் சமயத்தில் அம்மாது 'அவரது காலம்' என்னும் பெயரால் ஒரு புஸ்தகத்தை எழுதி முடித்தார். மகா யுத்த காலத்தில் அவ்வம்மையார் பிரான்சில் தங்கியிருந்தார், பத்திரிகைகள் மூலம் பிரசாரம் செய்து வந்த துடன் 1917-ம் வருஷத்தில், ஜர்மனியாரிடமிருந்து திரும்பக் கைப்பற்றப் பட்ட பிரதேசங்களில் ஜனங்கள் மீண்டும் குடியேறும்படி செய்யும் வேலையை மேற்கொண்டிருந்த ஒரு சங்கத்தின் உப தலைவரானார். யுத்த சமாதானம் நடந்தபோது ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்ட சமயத்தில் நேரில் இருந்து பார்க்கக்கூடிய உரிமை பெற்ற இரு மாதரில் இவரும் ஒருவர். 1920-ல் ஹாலிவுட்டுக்குச் சென்று ஏழு வருஷ காலம் வரை அங்கு தங்கியிருந்தார். படக்காட்சியில் காண்பிக்கத் தக்க கதைகள் பலவற்றை எழுதியதுடன் அவை படக்காட்சியாகத் தயாரிக்கப்பட்டபோதும் கண்காணித்து வந்தார். ரடால்ப் வாலிண்டினோ, குளோரியா சுவான்சன் ஆகியோருக்கும் திரையில் காதல் நடிப்பு எவ்வாறு நடிக்கவேண்டு மென்பதை ஸ்ரீ. எலினா கற்றுக் கொடுத்தாகச் சொல்லப்படுகிறது.

பேசும் படக் காட்சிகள் தோன்றிய ஆரம்ப காலத்தில் ஸ்ரீமதி எலினர் பிரிட்டிஷ் பிலிம் தொழிலை அபிவிருத்தி செய்ய இங்கிலாந்துக்குத் திரும்பி வந்தார். அவர் தன் சொந்த செலவிலேயே ஒரு பில்மைத் தயார் செய்தார். அதில் நாற்பதினாயிரம் பவுன் நஷ்டம் ஏற்பட்டது. பிரிட்டிஷ் பத்திரிகைகள் நிர்த்தாக்ஷண்யமாக அப்படத்தைக் கண்டித்து எழுதின. பாங்கிகளில் அவ் வம்மையாருக்குக் கடன் அதிகரித்துவிடவே மீண்டும் நாவல்களை எழுத ஆரம்பித்தார். ஆயினும் பிரிட்டிஷ் பத்திரிகைகள் அவரது நாவல்களையும் குறை கூறத் தொடங்கின. அவ்வம்மையார் பிரபல செல்வர்களுடன் பழகி யிருந்தாரே யொழிய அக்காலத்தில் செல்வாக்குடையவர்களா யிருந்த பிரபல இலக்கிய ஆசிரியர்களுடன் நெருங்கியதாகவே தெரியவில்லை ஸ்ரீமதி எலி னர் நாவல்களையோ இதர நூல்களையோ எழுதக்கூடிய இயற்கையான ஆற் றல் உடையவராக இருக்கவில்லை யென்றாலும் அவரது வாழ்க்கையே அவ ரைக் கதை எழுதும்படியும், காதற் கதைகளில் புத்தி செல்லும்படியும் தூண் டிற்று என்றுதான் கொள்ளவேண்டியதாக இருக்கிறது.

# மாணவர்களும்-சினிமாவும்

(தென்னுப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை)

சினிமா படக்காட்சி மாணவர்களுக்குச் சாதகம் செய்யக் கூடியதா? அல்லது பாதகம் விளைவிக்கக் கூடியதா? என்பதைக் கண்டறிய வேண்டி யிருக்கிறது. சினிமா காட்சி முதன்முதல் ஆரம்பிக்கப் பட்டதும், அதனுல் கல்வி யுலகத்திற்கும் பெருத்த நன்மையுண்டெனப் பல பிரமுகர்களும், பத்திரிகாசிரியர்களும் அபிப்பிராயம் கூறினர். அவர்கள் போற்றுவதைப் பலர் ஆதரித்தனர். தினசரி விடாது சினிமா போய் பார்த்தவர்கள் வெகு பேர்கள். ஒருவித கஷ்டமும் இல்லாமல் சினிமாக் காட்சியைப் பார்ப்பதால் தாங்களும் தங்கள் குழந்தைகளும் கல்வி யபிவிருத்தி யடையலாமென அவர்கள் நம்பியிருந்தனர். ஆனுல், இப்பொழுது ஷை சலனப் படக்காட்சிகளாலும் பேசும்படக் காட்சிகளாலும் கல்வியபிவிருத்தி ஏற்படுகிறதா? பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்குப் புகட்டப்பட்டுவரும் நற்குணங்களை அப் படக்காட்சிகள் இப்பொழுது புகட்டுகின்றனவா? என்று ஆராய்வோம்.

நமது அனுபோகத்தில் கண்டுள்ள சில விஷயங்களை இப்பொழுது ஒப்பிட்டுப் பார்ப்போம். சுருட்டு முதலிய லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பதும் மதுபானங்களை அருந்துவதும் மிகவும் கெடுதலென ஆராய்ச்சிகள் மூலம் பள்ளிக் கூடங்களில் மாணவர்களுக்கு எடுத்து போதிக்கப்பட்டுவருகிறது. ஆனுல் சினிமா காட்சிகளிலோ பிரபலஸ்தர்களாக வேடம்தரித்து வருபவர்கள் யாவரும் ஏராளமாய் சிகரெட் குடிப்பதையும், தாராளமாய் மதுபானங்கள் அருந்துவதையும் நாம் கண்ணுரப் பார்க்கிறோம். மற்றும் அப்படக் காட்சிகளில் மனதைக் கெடுக்கக் கூடியதான கேவலமான நாட்டியங்கள் ஆடப்படுவதையும் காண்கிறோம். குடித்தனப் பாங்கான மனைவி மக்கள் வாழ்க்கையின்றி அவசரக் கல்யாணமும், அவலம்கெட்ட குடித்தனப் பான்மையுமே படக்காட்சியில் ஏராளமாய் அடிக்கடி காட்டப்படுகின்றன. பாடசாலைகளில் துர்நடத்தைகள் கண்டிக்கப்படுகின்றன. ஆனுல் சினிமாவிலோ துர்நடத்தைகளே மலிந்து கிடக்கின்றன மிகவும் உத்தமமாக உண்மைக் காதலின் தன்மை படக்காட்சியில் மாறுபட்டுக் கேவலமாய்க் காட்டப்படுகிறது. பாடசாலைகளில் வீரர்களுடையதும் மதாசாரியர்களுடையதுமான படங்கள் தொங்கவிடப்படுவது வழக்கம். ஆனுல் சினிமா படங்களோ பெரும்பாலும் பாதி நிர்வாண ஸ்திரீகளது படங்களாகவும், ஸ்திரீ புருஷர்களது திருட்டுக் காதல்களைப் பற்றியதாகவு மிருக்கின்றன. தேக சௌகரியத்தையும்; திடசரீரத்தையும் அடைவதற்குண்டான மார்க்கங்களைப்பற்றிப் பாடசாலைகளில் போதிக்கப்பட்டு வருகின்றன. ஆனுல் சினிமா காட்சியினுலோ சரீர சுகத்தைக் கெடுக்கக் கூடிய பலவித கெட்ட பழக்க வழக்கங்கள் உண்டாவதற்கு ஏதுவாகின்றது.

இன்னும் எடுத்துக் காட்ட வேண்டுமானால் எவ்வளவோ உபமானங்களை யெடுத்துக் காட்டிக்கொண்டே போகலாம். இக்குறைகள் யாவும் ஆங்கிலேயர் நடிக்கும் படங்களிலேயே அதிகமா யிருக்கின்றனவாகையால், இந்திய மாணவர்கள் அவ்விதப் படக்காட்சிகளைப் பாராமலிருப்பதே நன்று. ஆனால் மாணவர்களுக் கேற்றபடி நடையுடை பாவனைக ளடங்கிய கதை—புண்ணிய சரித்திரங்கள்—காட்சிகள் காட்டப்படுமானால் அவைகளைப் பார்ப்பதால் மாணவர்களுக்கு நன்மையே தருமென்பது மிகையாகாது.

## மாணவர்களுக்கு வேண்டிய கல்வி.

கல்வி என்பதென்ன? அது கண், காது, கை, கால்கள் முதலியவைகளுக்குப் பயிற்சி கொடுப்பதேயாகும். மாணவர்களின் குணங்களையும் விசேஷங்களையும் ஒவ்வொரு துறையிலும் நாம் அறியவேண்டுவது அவசியமாகும். மூளைப் பெருக்கத்திலும் பரமார்த்திக வழிகளிலும் தேசதத்துவ ஆராய்ச்சிகளிலும் நல்லொழுக்க முறைகளிலும் மாணவர்களது இயற்கை அறிவு விரிவாகி கடைசியில் அவன் மனிதனாக ஆகும் காலத்தில், ஓர் உத்தம தேச பக்தனாகவும் கௌரவமுள்ள கனவானாகவும் ஆவதற்குரிய கல்வியைப் புகட்ட வேண்டுவது இன்றியமையாத தென்று காலம் சென்ற கோகலே அவர்கள் கூறியுள்ளார். ஆனால், தற்காலத்திய மாணவர்களுக்கு எத்தகைய கல்வி போதிக்கப்பட்டு வருகிறது. அதன் விவரங்களை ஆராயப்புகின் விரியும். இக்கால கல்விமுறையினால் நமது மாணவர்கள் வெறும் புஸ்தகப் பூச்சிகளாகவும் குமாஸ்தா கூலிகளாகவும் வெளியே வருகிறார்கள். மூளைக்குத் தாங்கமுடியாத அதிக வேலை கொடுக்கப்படுகிறது. பள்ளியினின்று மாணவன் படித்துமுடிந்து வெளியே வந்ததும் பிழைப்புக்குக் கஷ்டப்படுகின்றான். எங்கேனும் குமஸ்தா பதவி கிடைக்காதா? என்று மாணவர்கள் திண்டாடுகிறார்கள். காலை 8 மணி முதல் மாலை 6 மணி வரையில் எழுத்துவேலை வாங்கிக்கொண்டு 15 ரூபாவாகிலும் மாதம் கொடுத்துவிட்டு எந்தப் புண்ணியவானாவது வீட்டுக்குப் போகச் சொல்லமாட்டானா? என்னும் மாணவர்கள் எதிர்பார்த்து நிற்பதாக அறிகிறோம்.

முன்னர் ராஜப் பிரதிநிதியா யிருந்த லார்டு கர்ஸன் இந்திய மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்டுவரும் கல்வியானது அவர்களது பிழைப்புக்கு அனுகூலமா யிராமல் அவர்களுக்குப் பிரதிகூலத்தையே கொடுத்து வருகிற தென்றும் அவர்களது பிற்கால வாழ்க்கைக்கு ஒத்ததாக விருக்கும்படி செய்வது மிகவும் அவசியமென்றும் ஒரு பிரசங்கத்தில் கூறியிருக்கிறார். ஆனால் அவர் கூறியபடி செய்கையில் செய்து காட்டப்படவில்லை. லார்டு கர்ஸன் காலத்துக்குப் பிறகு கல்விமுறையில் மாறுபாடுகள் இருந்தாலும் அது மாணவர்களைத் தைரியவான்களாகச் செய்யவில்லை. அவர்கள் தனியாகச் சென்று பிழைப்பு தேடிக்கொள்ளும்படி தூண்டக் கூடியதாகவுமில்லை. இக்காலக் கல்வி முறையினால், சோம்பேறித்தனம், அடக்கமின்மை, நாஸ்திகபுத்தி, மரியாதையின்மை, சுயநலத்தைக் கோருதல், கோழைத்தனம் முதலிய தீக்குணங்களே உண்டாகின்றன வென்று சுவாமி விவேகானந்தர் தமது பிரசங்கத்தில் ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். போதாக்குறைக்கு மாணவர்கள் தேச பாஷையில் கல்வி கற்பிக்கப் படாம லிருப்பதும் முக்கிய காரணமாகும்.

இப்போது வேண்டுவது ஒன்றுதான். அதாவது தற்கால கல்வி முறை

# அபலையின் அதிருஷ்டம்

("கண்ணன்")

திருவேங்கட மலையின் சரிவுகளில் அடர்ந்து நின்ற மரங்களினிடையே காணப்படும் ஓர் பொய்கையில் திரளான ஜனங்கள் ஒருநாள் காலை ஐந்து மணிக்கெல்லாம் ஸ்நானம் செய்து நியமநிஷ்டை அனுஷ்டானங்கள் முதலியவற்றை செய்து கொண்டிருந்தனர். ஒரு சிறுவன் மாத்திரம் வேறு யாருடனும் சேராமல் தனியே துறையில் இறங்கி ஸ்நானம் செய்து விட்டு எம்பெருமான் திருச்சந்நிதானத்தை யடைந்தான். அன்று வைகுண்ட ஏகாதசிக் கடுத்த துவாதசி யானபடியால் கூட்டம் மேன் மேலும் வந்து கூடியது. ஸந்நிதிக் கதவுகள் திறக்கப்படாமையால் அனைவரும் வெளியே நின்றிருந்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம் திடீரென்று அர்ச்சகர் கதவுகளைத் திறந்தார். உடனே ஜனங்கள் ஒருவரோ டொருவர் நெருக்கித் தள்ளி விழுந்துகொண்டு ஸந்நிதிக்குள் நுழைந்தார்கள். ஒரு கிழவியும் யுவதியும் கூட்டத்தில் அகப்பட்டுக்கொண்டு தத்தளித்தனர். அவர்கள் அப்படியும் போக முடியாமல் இப்படியும் போக முடியாமல் கண் பிதுங்கி பரிதபித்தனர். அதைக்கண்ட தனியாய் நின்ற நம்பிளைஞனுக்கு ஓர் ஆவேசம் பிறந்தது. அவன் கூட்டத்தில் விழுந்து தன் முதுகினால் மற்றவர்களை நகர்த்தி வழி யுண்டாக்கி இருவரையும் கூட்ட மில்லாத ஓர் இடத்தில் போய் நிறுத்தினான்.

கூட்டத்தில் நுழைந்தபோது தன் மடியிலிருந்த மூட்டை கீழே விழுந்து விடடதால் அதைத் தேட மறுபடியும் கும்பலில் புகுந்தான். ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் மூர்ச்சை யடைந்து இருவரால் தூக்கிக் கொணரப்பட்டான். அவனால் காப்பாற்றப்பட்ட கிழவி அவனைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்றாள்.

அவ் வாலிபன் மூர்ச்சை தெளிந்து எழுந்தபோதுதான் ஓர் மஞ்சத்தில்

---

யை இந்திய மாணவர்களது தினக் கிராம வாழ்க்கைக்கு ஏற்றவிதமாகவும் பாடசாலைப் படிப்பு முடிந்தவுடன், அவர்கள் லகுவில் பிழைப்பைத் தேடிக் கொள்ளும்படியாகவும் இருக்கவேண்டும். மாணவர்கள் பள்ளியில் படிக்கும் காலத்திலே, அவர்களுக்கு ராணுவப்பயிற்சி கற்றுக்கொடுக்கவேண்டும். மாணவர்களுக்குக் "கஸரத்" நன்றாக பழகிக் கொடுத்து அவர்களைத் திடசாலிகளாகவும், திறமைசாலிகளாகவும் செய்யவேண்டும். ஒவ்வொரு பள்ளிக்கூட அதிகாரியும் தமது பள்ளி மாணவர்களில் ஒவ்வொருவரும் பலாட்டியராக ஆக வேண்டுவதற்கான தேக பயிற்சியைக் கற்றுப் பழகிக்கொடுத்து வரவேண்டும்.

படுத்திருப்பதாக உணர்ந்தான். தானிருந்த அறையை சுற்றிப் பார்த்த போது ஒரு நாற்காலியில் தன்னால் காப்பாற்றப்பட்ட கிழவி உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

உடனே அக் கிழவி எழுந்து வந்து, "அப்பா! உடம்பு எப்படி இருக்கிறது. காபி கொண்டு வருகிறேன். இரு" என்று சொல்லிக்கொண்டே வெளியில் சென்றாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் அவள் காபியுடன் உள்ளே வந்தாள்.

சிறுவன்:—"அம்மா! இப் பிரபஞ்சத்தில் அநாதையான என்னை ஆதரவுடன் காப்பாற்றிய தாங்கள் யார்? நான் எப்படி இங்கு வந்தேன். தயவு செய்து கூறவேண்டும்."

கிழவி:—"குழந்தாய்!"

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

என்றபடி அதற்கு முன் க்ஷணம்தான் பிராணபத்தி லிருந்து எங்களிருவரையும் காப்பாற்றிய உனக்கு உன் ஆபத்து காலத்தில் உதவி செய்யாவிடின் நாங்கள் பெண்டிரா? அரக்கிக ளன்றோ! தவிரவும் நீ, கொஞ்ச காலத்துக்கு முன் இறந்து போன என் பேரனைப்போலவே இருக்கின்றபடியால் உன்னை இங்கு கொண்டு வந்தோம். எங்களுக்கும் வேறு ஆண் துணையில்லா திருப்பதால் நீயும் எங்களிடமே தங்கி விடலாம். இப்பொழுது இந்த காபியைச் சாப்பிடு. சமையலும் ஆகிவிட்டது; சாப்பிடுவோம்."

சிறுவன்:—"அம்மா! உங்கள் உதார குணத்திற்குப் பெரிதும் வந்தனம் செய்கிறேன். ஆனால் நான் தங்களுடன் தங்குவதென்பது கூடாத காரியம், அதை மாத்திரம் மறந்து விடுங்கள்" என்று வேண்டினான்.

கிழவி:—"ஆனால் சரி!" என்ற வார்த்தைகளோடு வெளியில் சென்று விட்டாள்.

இரவு 9-மணி இருக்கும். இன்னும் கோயில் கதவு சாத்தப்படவில்லை. நம் சிறுவன் இராப் போசனத்தை முடித்து தனக்கென்று விடப்பட்டிருந்த அறையில் உட்கார்ந்திருந்தான். 10-மணி அடித்ததும் ஒரு போர்வையை எடுத்துப் போர்த்திக்கொண்டு அறையைவிட்டு வெளியேறி தோட்டத்துக்கு சென்றான். அங்கு ஒரு மேடையருகில் இவனுக்கு முன்னமேயே ஒரு பெண் மணி வந்து காத்துக் கொண்டிருந்தாள். எனவே, வாலிபன் அவ் வனிதையை நோக்கி, "நங்கையர் திலகமே! நீ யார்! என்னை இவ்விடம் வரும்படி எழுதவேண்டிய காரணம் யாது? திக்கற்ற பாவியும் ஏழையுமான என்னால் உனக்கு என்ன நன்மை யுண்டாகப் போகிறது?" என்று கேட்டான்.

மாது:—"அன்பரே! புஷ்கரணியில் ஸ்நானம் செய்யும்போது முதன் முதலில் தங்களைக் கண்டேன். ஏதோ ஒருவித சக்தி என்னுள் புகுந்து என் ஹிருதயத்தைத் தங்கள் பாதங்களுக் குறைவிட மாக்கிக்கொண்டது. ஆகவே! ஆண் சிங்கமே! அடியேனை ஏற்றுக்கொண்டு மட்டில்லா மகிழ்ச்சியை யளியும்" என்று கூறி முழந்தாட்படி யிட்டாள்.

இளைஞன்:—"பெண்மணியே உன் சித்தம் சபலித்து விட்டதோ! பேதாய்! தங்க இடமின்றி தவிக்கும் எந்தனையோ நீ மணப்பது? இவ் வெண்ணத்தை விட்டுவிடு. நான் ஓர் பரதேசி; ஆதலால் என்னை மறந்து விடு."

மாது:—'என் ஆவியைக் கொள்ளைகொண்ட அன்பரே! கற்புள்ள மங்கை எவளும் தமக்கு ஒருவரிடத்தே தோன்றிய காதலை வேறுமுகப்படுத்தி பிறிதோரிடத்திற் செலுத்துவளோ!" என்றாள். அவள் கண்களில் நீர் பொங்கி வழிந்தது.

இளைஞன்:—"மங்கையே!" என்று என்னமோ கூறவாயெடுத்தபோது அவர்களிருந்த இடத்தில் மின்சார கைவிளக்கின் வெளிச்சம் திடீரென்று வீசி மறைந்தது. அதனால் திகிலடைந்த இளைஞன் மேடையினின்றும் இறங்கி அப்பால் செல்லலானான்.

ஆனால் ஓரடி எடுத்து வைக்குமுன் அங்கு நின்ற அணங்கு அவனடிகளைப் பிடித்துக்கொண்டு, "அன்பரே! இப்பேதையின் உள்ளத்தை வசமாக்கிக் கொண்டு எங்கு செல்கின்றீர்? வேண்டாம். அஞ்சவேண்டாம். ஆண்டவன்—காதலென்னும் பேரணியை அளித்த ஆண்டவன்—ஆதரவற்றலை வோர்க்கு அஞ்சலென் றுரைக்கும் ஆண்டவன்—நமக்குறும் இடையூறுகளனைத்தையும் அதிவிரைவில் அகற்றுவன். உண்மையில் உமது உள்ளம் எனக்கிடமளித்ததா இல்லையா? கூறி விடுங்கள்.—ஐயோ! ஏன்? எங்கு செல்கின்றீர்கள்? வேண்டாமே! எங்கும் போகவேண்டாமே! ஐயோ! மறுபடியும் போகின்றாரே! நாதா ஓடாதீர்கள். ஆஹா! பிரிந்து விட்டாரே! நான் எங்கு கண்டு தேடுவேன்! என் அன்பர் என்னை இங்கேயே பரதவிக்க விட்டு எங்கேயோ சென்று மறைந்தனரே. இவ் வந்தகாரத்தில் எங்கு சென்றலைவேன்? திருவடிகளை இறுகப்பற்றி யிருந்தும் வெளிச்சத்தைக் கண்டவுடன் எங்கோ சென்று மறைந்து விட்டாரே! ஹே! பக்தவத்சலா! பரம தயாளா! நான்—ஒருவித கள்ளங் கபடறியாதவளாயிருந்தும் சமயம் தெரிந்து ஒருவரையே காதலித்தும் என் எங்களைப் பிரித்தனை" என்று பல வாறாக புலம்பிச் சோர்ந்து கீழ் விழுந்தாள்.

* * * *

இடையே மூன்று வருடங்கள் கழிந்தன. திருப்பதி பாவாஜி மடத்துக்கு பின்னால் உள்ள ஜோதிபவனில் ஓர் மூதாட்டி தன் அருகே வீற்றிருந்த ஒரு பைந்தொடியைநோக்கி, "சுபூநதாய்! கோமளம்! அதைரியப் படாதே. இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவார். மூன்றும் வருடம் உன்னைத் தோட்டத்தில் பரிதபிக்கும்படி விட்டவர் சாதாரண மனிதர் அல்லர். தன் முயற்சியால் இப்போது எண்ணூபுரம் இளைய ஜமீன்தார் ஆகி விட்டார். விரைவில் வந்து உன்னைக் காண்பார்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஓரிளைஞன அங்கு வந்து நின்றான்.

கிழவி அவனைக் கண்டதும், "வாருங்கள். உட்காருங்கள்" என்றாள். கோமளம் எழுந்து நாணத்துடன் ஒரு பக்கமாய் சென்று நின்றாள். அதற்குள் இரு ஜவான்கள் பெட்டி முதலிய சாமான்களைக் கொண்டுவந்து அங்கு வைத்துவிட்டு இளைஞனை நோக்கி வந்தனம் செய்து நின்றனர். இளைஞனும் அவர்

களுக்கு பிரதி வந்தனம் செய்து அவர்களை அனுப்பிவிட்டு, கோமளத்தை நோக்கி பின்வருமாறு கூறலானான்.

"மங்கையர்க்கரசியே! உன் மலர்க்கரங்கள் எனது காடு முரடான பாதங்களைக் கெட்டியாகப் பிடித்தும் அவைகளை நான் உதறித் தள்ளிவிட்டு ஓடிய குற்றத்துக்காக முதலில் என்னை மன்னிப்பாயாக. துரதிர்ஷ்டசாலியான நான் எங்கு சென்றபோதிலும் ஏமாற்றமே அடைந்தேன். ஆதலால் சமூகத்தில் எனக்கு பற்றில்லாது திரிந்து வந்தேன். ஆனால் உன் கடைக்கணிப்பு என்மேல் பட்டவுடன் என்னைப் பிடித்திருந்த சனியன் ஒழிந்தது கண்டேன். உன்னிடமிருந்து தப்பி யோடியபோது யான் ஓர் அநாதையாகவே இருந்தேன். ஆனால் தெய்வாதீனமாய் கிடைத்த ஓர் நண்பனின் உதவியால் பகீரதப் பிரயத்னம் செய்து வார்சில்லாத எண்ணூபுரம் ஜமீனுக்கு வார்சுதாரன் ஆனேன். இவை யாவும் யான் உன்னிடமிருந்து நீங்கிய பின் கிடைத்தன வாதலால் முதலில் என்னையே நம்பி, நான் மறுபடி வருவேனோ மாட்டேனோ என்றேங்கி வெம்பும் உன்னைத் தேறுதல் கூறி மன்னிப்புக் கேட்டுக்கொள்ளவே நான் முதலில் வந்தேன். என்ன சொல்கிறாய்? நான் உன்னைப் பிரிந்து சென்றதை மனதில் வையாமல் மன்னித்து என்னை ஏற்றுக்கொள்ளாயா?" என்று கேட்டான்.

இதற்கு பதில் யாதும் இல்லையோ என்று எண்ணுகையில் "ஆமிற்று" என்று கூறும் சொற்கள் 'களுக்' என்ற சிரிப்பின் ஒலியில் கலந்தது.

பின் ஒரு நல்ல சுபதினத்தில், எண்ணூபுரம் இளைய ஜமீன் எர்ரைய பூபதிக்கும் திருப்பதி தேவஸ்தானக் கமிட்டி காரியதரிசி காலஞ்சென்ற குருலிங்க பூபதி குமாரி கோமளவல்லி அம்மைக்கும் எம்பெருமான் சந்நிதிக்கு முன்னால் விவாகம் விமரிசையாய் நடந்தேறியது.

## புதிய ஜீவிய சந்தாதார்.

இவ்வருஷம் நமது "ஆனந்த"னுக்கு யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த திருநெல்வேலி வடக்கில் வாழும் ஸ்ரீமதி-எஸ். சரவணமுத்து அம்மையார் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெருமகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்ளுகிறோம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன்வந்த ஸ்ரீமதி சரவணமுத்து அம்மையாருக்கு நமது மனப்பூர்வமான நன்றியறிதலைச் செலுத்துவதோடு, அவர்கள் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ அருள்புரிய வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகிறோம். இம்மங்கையர் திலகத்தைப் பின்பற்றி ஏனைய தமிழ்ச் செல்வர்களும் நமது "ஆனந்தனை" ஆதரிக்க முன் வருவார்களென்று எதிர்பார்க்கிறோம்.

பத்திராதிபர்.

# மஹாத்மா மணிமொழி

(S. கணேசன்.)

சரியான காரணங்களில்லாததும், என்மனதுக் கொவ்வாததுமான எந்த அர்த்தத்தைக் கொண்டு சாஸ்திரங்களை விளக்கினாலும் அதனை நான் ஏற்றுக்கொள்ளமுடியாது.

* * * *

ஹிந்து தர்ம சாஸ்திரங்களுக்கு தற்காலத்திலுள்ள சங்கராச்சாரியர்களாலும், சாஸ்திரிகளாலும் சரியான வியாக்கியானம் தரப்படுகின்றதென்பதை நான் அழுத்தமாக மறுக்கிறேன். சாஸ்திரங்களைப் பற்றிய நமது தற்கால ஞானம் மிகவும் குழம்பிக் கிடக்கின்றதென்பது எனது நம்பிக்கை.

* * * *

அஹிம்சையைக் கடைப்பிடிக்காதவனும், சத்திய நெறியில் செல்லாதவனும், பிரமசர்யத்தை அனுஷ்டிக்காதவனும், மண், பெண் பொன் ஆசைகளை விட்டொழிக்காதவனும், உண்மையில் சாஸ்திரஙகளை அறிந்தவனல்ல என்று ஹிந்து தர்மம் கூறுவதை நான் அப்படியே ஒப்புக்கொள்கிறேன்.

* * * *

முத்தி நிலையை ஒவ்வொருவரும் ஒரு குருவின் மூலமாக அடையவேண்டுமெனபதிலும் எனக்கு நம்பிக்கையுண்டு. ஆனல் பரிசுத்தமும் பரிபூரணமான ஞானமும் பொலிந்து நிற்கும் குரு ஒருவர் கிடைப்பது இப்பொழுது அரிதாக இருக்கிறது.

* * * *

கடவுள் பொறுமைக் குணமுள்ளவர். தன் அதிகாரத்தைப் பிறர் பாகித்துக் கொள்ளச் சம்மதியார். ஆகவே அவர்முன் ஆஜராகும்போது மிகுந்த அடக்கத்துடனும், வெறுங்கையோடுந்தான் சரண்புகவேண்டும். அப்போது தான் அவர் நம்மை உலக மக்களிடையே துலங்கச் செய்வார்.

* * * *

சத்தியத்தை அறிவதற்காகவே தனது காலத்தையும், முயற்சியையும், ஊக்கத்தையும் செலவழிப்பவனுக்குக் குழந்தைகளைப் பெற்று வளர்த்தல், வீடு வாசல்களை வைத்துக்கொண்டு குடும்பத்தை நடத்துதல் இவைபோன்ற சுயநலம் மிகுந்த காரியங்களுக்கு அவகாசமே கிடையாது.

* * * *

சத்தியத்தை நாடுபவன் சுயநல சிந்தை யற்றவனு யிருத்தல் வேண்டும். சுயநல உணர்ச்சிகளைத் திருப்தி செய்வதிலேயே ஈடுபட்டிருந்த எவனும் சத்தியத்தை உணர்ந்ததாக நாம் இதுவரை கேள்விப்பட்டதில்லை.

ஒரு புருஷன் தன் மனைவியைச் சகோதரியாகவும், ஒரு மனைவி தன் புருஷனைச் சகோதரனாகவும் பாவிக்கத் தொடங்கிவிட்டால் அவர்கள் உலகத்துக்குச் சேவை செய்ய தகுந்தவர்களாகின்றனர்.

*   *   *   *

காம இன்பத்தில் நமது ஜீவசக்தி அனைத்தையும் வேண்டுமென்றே சிறிது சிறிதாக இழப்பது எவ்வளவு மடத்தனமானது? வஜ்ஜிர சரீரத்தையும், அற்புதமான மூளை சக்தியையும் வளர்த்துக்கொள்ளவே ஈசுவரன் நமக்கு ஜீவசத்தை அளித்திருக்கின்றான். அப்படியிருக்கும் ஒன்றை நாம் தேக சம்பந்தமான ஒரு ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளுந் துறையில் வியர்த்தமாக்குவது கடவுளின் ஆக்ஞைக்கு விரோதமாக நடப்பதாகும்.

*   *   *   *

நம் மனத்திலெழும் ஒவ்வொரு கெட்ட எண்ணத்தையும் அணுகவொட்டாமல் நாம் எதிர்த்துக் கொண்டே இருந்தால் உடலும், மனமும் ஒரே நிலையிலிருக்கும்.

*   *   *   *

ஐம்புலன்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவியையும், உணர்ச்சியை ஊட்டுவதான உறுப்புக்கள் அனைத்தையும் அடக்குவதே பிரமசரியம். ஒருவன் ஒரு உறுப்பை மட்டும் அடக்கிவிட்டு மற்ற எல்லாவற்றையும் அதனதன் இஷ்டப்படி கருமம்புரிய விட்டுவிடுவானாகில் பிரமசரியத்தை அனுஷ்டிக்கும் முயற்சியில் தோல்வியையே காண்பான்.

*   *   *   *

ஒரு புலனை அடக்கக் கங்கணம் கட்டிக்கொண்டவன், மற்ற யாவற்றையும் அடக்கவும் கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். பிர்மசர்யத்தின் பொருள் குறுகிய முறையில் அறிந்து கொள்ளப்படுவதாலேயே தீங்கேற்படுகின்றதென்று நான் எப்பொழுதும் உணர்ந்து வருகிறேன்.

*   *   *   *

முக்கியமாக மனிதனின் நாக்குத்தான் அதிக பாவத்தைச் செய்கிறதென்பது எனது கருத்து. நாக்கை அடக்குபவன் எதையும் அடக்கிவிடலாம்.

*   *   *   *

இங்கிலாந்திலிருந்தும், ஜப்பானிலிருந்தும் மலிவான துணி கிடைக்கின்றதே என்று எண்ணி, என்று நாம் அவ்விடங்களிலிருந்து அதை வாங்கத் தலைப்பட்டோமோ அன்றே நமது பெருமையையும், கௌரவத்தையும் இழந்தோம்.



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

39-வது காரிகை.

சூக்ஷ்மா மாதாபிதருஜாஃ ஸஹப்ரபூதைஸ்திரிதா விசேஷாஃ ஸ்யுஃ—
சூக்ஷ்மாஸ் தேஷாம் நியதாமா தாபிதுர்ஜா நிவர்த்தந்தே.

[ஜகத் வியாபாரம் மூன்று வகையான பொருட்களால் நடைபெறுகின்ற விதம்]

விசேடித்து நின்று சிருஷ்டி, திதி, சங்காரத்தின் வழியாக ஜகத்தை நடத்தும் பொருள்கள் மூன்று. அவை சூக்கும சரீரங்கள், அன்னை பிதாக்கள் புணருவதால் உண்டாகும் மாமிச தேகங்கள், மலை மரம் முதலியவான பூததேகங்கள். இவற்றுள் சூக்கும தேகங்கள் அழிவுறுவண்ணம் நியமிக்கப் பட்டன; மாதாபிதாக்களால் உற்பவமாகும் தேகங்களோ சிறிது காலம் இயங்கிப் பின்னர் விருத்தியற்றுப் போவன.

உரை:—சூக்கும சரீரமென்பது இலிங்க சரீரமே; இதனைப் பின்னர் விளக்குவுற்றார். சூக்கும நோக்கம் உற்றவர்களுக்கல்லாது ஏனையோர்க்கு இலிங்க சரீரம் புலப்படாது. மாதாபிதாக்கள் வனையும் தேகங்களெல்லாம் அவரவர்பற்றி நிற்கும் இலிங்க தேகங்களை (வண்டிக்கு அச்சு இருப்பதுபோல்) அச்சாகக் கொண்டது. Linga sareeram supplies the model upon which the body with flesh and blood is constructed. பூததேகங்களோ மாமிச தேகபோஷணத்திற்கும் மாமிச தேகங்கள் பிற மாமிச தேகங்களை வனைதற்கும் ஏற்பட்டன. பூததேகங்களும் இருவகையின; ஜீவரசம் வெளிப்படத் தோன்றாத மலம் முதலியன (The mineral kingdom), ஜீவரசம் (சைதன்னியம் தோன்றாது) ததும்பி நிற்கும் விருக்ஷம் முதலியன (The vegetable kingdom) இவற்றுள் மண் வடிவினதாய் ஜீவரசமும் சைதன்னியமும் வெளித்தோன்றாததால், உப்பு முதலியன ஜீவரசத்தை வெளிப்படுத்தவல்ல விருக்ஷாதிகட்கு உணவாகின்றன.

மாமிச தேகங்கள் தத்தம் கர்மத்தை சுகதுக்கத்தோடு பூமியில் அனுபவித்து, விட்ட குறை தொட்ட குறை முடித்தற்கு வந்து தோன்றி, தாம் கொண்டு வந்த வினை, போகமானபின், இயக்குஞ் சக்தி நின்ற யந்திரம் தொழில் இன்றி வாளா (சும்மா) நிற்பது போல், சுத்த ஜடப் பொருள்களாய் விடுகின்றன. இதனையே மரண மென்பர். விருக்ஷாதிகளோ ஆனந்தமான தமது சுழுத்தி நிலையினின்றும் எழுப்பப்பட்டு மாமிச மயமாகிச் சைதன்

னியச்சை வகிக்க ஆரம்பிக்கின்றன. விருக்ஷாதிகட்கு உணவாகும் மண் கல் முதலியன தாம் நிற்கும் பிரக்ஞை கடந்த துரிய நிலையை விட்டு பிரக்ஞாரூப மான ஆனந்த நிலைக்குக் கொண்டுவரப் படுகின்றன.

இலிங்கங்களாகிய சூக்கும தேகங்கள் தான் இனி யூட்டப்படும் போகத் தைத் துய்த்த கன்மங்களை (கிரியாசக்திகளை)த் தம்மிடத்தே யமையப்பெற்று ஜனன மரணச் சுழற்கண் அணுக்களை வீழ்த்தி அவ்வவற்றின் வினைப்பலனை அவ்வவற்றிற்கு ஊட்டுவிக்கின்றன.

கன்மப் பிராப்தியை யூட்டுவிக்கும் தானமாகிய இப் பூலோகத்திற் புகுத்தி, பாவ புண்ணியப் பலன்களை ஊட்டுதற்கும், நிரயங்களுள் (நரகத்தி னுள்) புகுத்தி தீவினை யூட்டுதற்கும், சொர்க்கத்தில் தூத்தி விட்டு நல்வினை யூட்டுதற்கும் தன்னிடத்தே யுகந்த சக்திகளை யமையப் பெற்ற இலிங்க தேகம் எத்தகைய தென்பதனை யடுத்த காரிகை விளக்குகின்றது.

## 40-வது காரிகை.

பூர்வோத்பந்நம சக்தம் நியதம் மஹதாதி சூக்ஷ்ம பர்யந்தம்—சம்ஸரதி நிரூப போகம் பாவை ரதிவாஸிதம் லிங்கம்.

## இலிங்கத்தின் இலக்கணம்

இலிங்கமே (சிருஷ்டியாரம்பத்தில்) முதற்கண் வெளித் தோன்றியது, தடையுறா வியல்பினது, புருஷன் கடைத்தேறும் வரை மறையாது வெளிக் கண் நிற்கும் நியமத்தைப் பூண்டது; மகத் முதற்கொண்டு மெல்லிய தன் மாத்திரைகள் வரையுள்ள தத்துவக் கூட்டத்தாலாயது, கூடுவிட்டுக் கூடு பாய்ந்து ஆடும் இயல்பினது, தனக்கெனப் போகமில்லாதது, எண்ணங்களை (பாவங்களை)த் தன்பா லமையப் பெற்றது, புருஷார்த்தத்தைச் சாதித்துத் தான் போய் பிறந்த விடத்தில் மறைந்து கொள்ள வல்லது.

உரை:—இலிங்கமே காரண சரீர மென்பது. இது சித்திரம் போன் றது; இதுவே அவரவர்க் குரித்தான பிரம்மலபி யென்ற தலைவிதி அல்லது தலையில் எழுதிய எழுத்து. சித்திர ரூபமா யமைந்திருப்பது பற்றிப் போலும். இஃது இலிங்க மெனும் நாமம் பெற்றது.

ஆலம்வித்தில் பின் உண்டாகவல்ல ஆலமரம் சக்தி மயமாய் தன் மாத் திரைகளோடும் மறைவிலிருந்து பின்னர் பிரம்மாண்டமான விருக்ஷமாய்த் தோன்றுவது போல், இலிங்க சரீரமே இம் மாயப் பிரபஞ்சத் தோற்றத்திற் கும் வித்தாம். அவ்வியக்தமாகிய பிரகிருதியில் இவ் விததே முதற்றோன்றி யது. பிரமபீஜமாகிய இவ் வித்தினுள் மகத்தும், அகங்காரமும், பத்து இந் திரியங்களும், பஞ்சதன் மாத்திரைகளும் உள்ளுறைந்து பிரபஞ்ச சிருஷ் டியை நடத்திக் கொண்டிருக்கும்.

இலிங்கமாகிய முதல் முதல் தோன்றிய காரண சரீரத்துள் ஆன்ம கோடிகளினுடைய பலவகைப்பட்ட சூக்கும சரீரங்க ளெல்லாம் உள்ளடங்கி நிற்கும். ஓர் தீபத்தினின்றும் பற்பல தீபங்களும் தோன்ற வல்லது போல் ஆன்மா பூமியில் உதயஞ் செய்யவல்ல கன்ம பக்குவம் நேர்தலும் அதற்கேற்ற சூக்கும சரீரம் வெளித தோன்ற ஆரம்பிக்கும்.

காரண சரீரம் கல்லையும் மண்ணையும் மற்றெதனையும் ஊடுறுவிச் செல்ல வல்லது ஆதலின் தடையுறா வியல்பினது.

பிரபஞ்சத்திற்றள்ளுண்ட புருஷன் கடைத்தேறும் வரை அவனது காரண சரீரம் பிரபஞ்சத்திலேயே உழலா நிற்கும் நியதியை யுடையது.

காரண சரீரம் அகங்காரத்தை யுள்ளடங்கிய பதினெழு தத்துவங்களை யுள்ளடக்கியது.

காரண சரீரமாகிய இலிங்கம் ஓர் பற்றுக் கோடாகிய கூட்டை விட்டு மற்றோர் பற்றுக் கோடாகிய கூட்டினுள் நுழையவல்லது. பிரகதாரண்ணிய உப நிடதத்தில் யக்ஞ வல்கியன் ஜனகனுக்கு இலிங்கம் கூடுவிட்டுக் கூடுபாயும் தன்மைமையை விளக்கினன். புல்லிலிருக்கும் ஓர் புழுவானது புல்லின் நுனியை யடைந்து தன்னைச் சுருக்கிக் கொண்டு அடுத்து நிற்கும் புல்லின் நுனியைத் தாவிப் பற்றுவது போல் இலிங்கம் தான் வாழ்ந்த கூட்டினுள்ள சகல போகத்தையும் அனுபவித்து மற்றும் அதன் கண் அனுபவிக்க ஒன்றுமில்லாதது கண்டு அதனை நீங்கி மற்றோர் பற்றைப் பிடித்துக் கொள்கின்றது.

காரண சரீரம் சுய போகமற்றது. சைதன்னியனோடு தொடக்குண்டாலன்றி, போகம் வேறு எவ்விடத்தும் உண்டாகாது. இலிங்க சையோகமே பந்தமும் இலிங்க நீக்கமே முத்தியுமாம்.

பாவங்களைத் தன்பா லமையப் பெற்றது; இப்பாவங்கள் (எண்ணங்கள்) புத்தியின் மாட்டுள்ளன; புத்தி இலிங்கத்தின் ஓர் அங்கமாதலின் சகல எண்ணங்களும் இலிங்கத்திலிருப்பதாகத் தோற்றம் ஏற்படுகின்றது. எண்ணங்க ளெல்லாம் போகமாய் விளைந்து துய்க்கப்பட்ட பின் இலிங்கம் பந்திக்கும் ஆற்றல் குன்றி மறைந்து போகின்றது.

## 41-வது காரிகை.

*சித்ரம் யதாஸ்ரய மிருதே ரதாண் வாதிப்யோ யதாவி நாசாயா— தஹஹிள விசேஷைஃ நதிஷ்டதி நிராஸ்ரயம் லிங்கம்.*

[இலிங்கம் (காரண சரீரம்) பற்றுக் கோடின்றி அமையாதென்பது.]

சித்திரம் சுவரையின்றி யமையாதது போலவும், நிழல் ஸ்தம்பம் இல்லாமல் அமையாதது போலவும் இலிங்கமும் ஏதேனு மோர் தடிப் பெய்திய பற்றுக் கோட்டைப் பிடிக்காது தனித்து நிற்க முடியாதது. [பற்றுக் கோடு= அதிட்டானம்; நிலயம்.]

உரை:—சிலர் இலிங்கத்திற்கும் இலிங்க தேகத்திற்கும் வேற்றுமை யுண்டென்பர்; புத்தி, அகங்காரம், மனம், பத்து இந்திரியங்களாகிய பதின் மூன்றன் கூட்டமே இலிங்க மெனவும், இவை பஞ்சதன் மாத்திரைகளோடு கூடி நிற்கும் பொழுது இலிங்க தேகம் எனவும் பெயர் பெறும் எனக் கொள்வர். தன் மாத்திரைகளை விட்டு இலிங்கமாகிய கரணேந்திரியங்கள் நிலை பெறமாட்டா. தன் மாத்திரா தேகமும் தடிப் பெய்திய தூல தேகத்தை யொட்டாது நிற்பின் ஓரிடத்து அமைந்திருக்கும் திற மில்லாதது ஆகவே இலிங்க சரீரமே சித்திரம் போன்ற மெல்லிய ஓர் பொருளாம். இஃது தடித்த ஒன்றின் மாட்டு கட்டப்படாதாயின் நிலை பெறாது எங்குந் திரியும். கௌட பாதர் எலும்பு சிவபெருமான் மேனி யெங்கும் திரிவது போல் இலிங்கம் திரிலோகங்களிலும் வியாபிக்க வல்லதெனக் கூறினர்.



**60 மைல் நீளமுள்ள சுவர்:—**

*பிரான்சில் ஆறுகோடி பவுன் செலவு செய்து ஒரு சுவர் கட்டப்பட்டிருக்கிறது. பீரங்கிக்குண்டு துவாரங்களுடன் எழுப்பப்பட்டுள்ள அந்த காங்கிரீட் சுவரானது 60 மைல் நீளமுள்ளதாக இருக்கிறதாம்.*

***

**அமெரிக்கரின் விசித்திர உயில்:—**

*சமீபத்தில் நியூயார்க்கில் சிஸெப்பேகாலோ என்னும் பெயருடைய ஒருவரது உயில் வெளியிடப் பட்டிருக்கிறது. அதில் அவர் தமது 4 மக்களுக்கும் இரண்டரையணா விழுக்காடு ஒதுக்கிவைத்து, அப்பணத்தைக் கொண்டு அப்பிள்ளைகள் ஒரு கயிறுவாங்கி அதைக்கழுத்தில் சுருக்கிட்டுக்கொள்ளலாம் என யோசனை கூறி யிருக்கிறாராம்.*

***

**தொண்டுக்கிழவன்மீது காதல்கொண்ட குமரி:—**

*யுஸோஸ்லேவியா என்னுமிடத்தில் போஸினியா என்னும் பெயருடைய செல்வச் சீமாட்டி யிருக்கிறாள். அவள் நல்ல அழகி. 17 வயதுடைய கட்டிளங்குமரி. அத்தகையவள் சுமார் 100 வயதுள்ள தொண்டு கிழவனொருவனைக் கண்டு காதல் கொண்டு விவாகஞ் செய்துகொண்டாளாம்.*

***

**20,000 ரூபாய் பரிசு பெற்ற நாய்க்குட்டி:—**

*பல்கேரியா நாட்டில் சோபியா நகரில் ஒரு கனவான் தாம் வளர்த்து வரும் நாய்க்குட்டி யொன்றின்மீது ஒரு லாட்டரியில் டிக்கெட் வாங்கினார், அந்த டிக்கெட்டுக்கு 20:000 ரூபாய் பரிசு விழுந்ததாம். எனவே, மேற்படி கனவான் மிகவும் மகிழ்ச்சியடைந்து, அநத நாய்க்குட்டிக்குப் பெரிய ஓட்டலொன்றில் விருந்து நடத்தினாராம்*

***

**பெண்களை வெறுப்போர் சங்கம்:—**

*யுதா பிரதேசத்தைச் சேர்ந்த சால்ட் லேக் சிட்டி என்னுமிடத்தில் 14 வாலிபர்கள் கூடி 1901-வது வருஷத்தில் பெண்களை வெறுப்போர் சங்கம் ஒன்றை ஸ்தாபித்தனராம். ஆனால் இப்போது அவர்களில் 10 பேர் விவாகமானவர்களாக இருக்கிறார்கள்.*

***

**103 வயதில் நடனஞ்செய்த மாது:—**

*கானடா, மானிடோபா என்னுமிடத்திலுள்ள மிஸஸ் நான்ஸிபாய்ட்ராஸ் என்னும் மாது தமது 103-வது பிறந்த தினத்தை யொட்டி நடந்த விருந்தில் தாமே நடனஞ் செய்யத் தொடங்கிவிட்டாராம்.*




புற்களில் 4,500 வகைகளிருக்கின்றனவாம்.

*　　*　　*　　*

இங்கிலாந்திலிருக்கும் இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளெல்லாவற்றின் மூலதனம் 1500,000,000 பவுனும்.

*　　*　　*　　*

மாஸ்கோ லைப்ரெரியில் 6500,000 புத்தகங்கள் இருக்கின்றனவாம்.

*　　*　　*　　*

மகா யுத்தத்திற்குப் பிறகு, லண்டன் சர்வகலாசாலையில் 70 குருடர்கள் பட்டங்கள் பெற்றிருக்கின்றனர்.

*　　*　　*　　*

பிரான்ஸில் 1914–ம் வருஷத்திற்குப் பின்னர் பைத்தியக்காரர்களின் தொகை 41.7% அதிகமா யிருக்கிறதாம்.

*　　*　　*　　*

உலகில் வருஷ மொன்றுக்கு 19,000,000 டன் காகிதம் விற்பனையாகிறதாம்; இதில் பத்திலொருபங்கு அமெரிக்காவில் விற்பனையாகிறதாம்.

*　　*　　*　　*

ஐரோப்பாவில் ரேடியோ வாயிலாக 207,000,000 மககள் விஷயங்களைத் தெரிந்து கொள்ளுகிறார்களாம்.

*　　*　　*　　*

இங்கிலாந்தில் வருஷ மொன்றுக்கு, புகைப் போக்கிலிருந்து வெளியாகும் புகை இனத்திற்காகமட்டும் 80,000,000 பவுன் செலவுசெய்யப்பட்டு வருகிறதாம்.

*　　*　　*　　*

உலகிலுள்ள பறவைகளை யெல்லாம் அழித்துவிட்டால் பூமியிலுள்ளவர்களை கிருமிகள் 4 வருஷங்களில் விழுங்கி விடுமென்று கணக் கெடுக்கப்பட்டிருக்கிறது.

*　　*　　*　　*

கிறிஸ்து பிறப்பதற்கு 7000 வருஷங்களுக்கு முன் இருந்த பாபிலோனிய தஸ்தாவேஜுகளில் பாங்கித் தொழிலைப்பற்றிய பிரஸ்தாபம் குறிப்பிடப்பட் டிருக்கிறதாம்.

*　　*　　*　　*

இங்கிலாந்து 19-வது நூற்றாண்டின் கடைசி 25 வருஷங்களில் அந்நிய நாடுகளுக்கு 7,000,000,000 பவுன் கடன் கொடுத்திருக்கிறதாம்.

*　　*　　*　　*

கிரேட் பிரிட்டனில் 15,000 மருந்து கடைகளும், 47,000 க்ஷவரக் கடைகளும் இருக்கின்றனவாம்,

# ஆசிரியர் குறிப்புக்கள்

## வங்காளி மொழியில் வாழ்த்து

இந்தியாவிலேயே எல்லாத் துறைகளிலும் மிகத் தீவிரமாக முன்னேறி வரும் ஒரு சமூகத்தார் யாரென்றால், அவர்கள் வங்காளியர் என்பதை யாரும் ஒப்புக்கொள்வார்கள். மற்ற மாகாணத்து மக்களைவிட வங்காளிகள் கலை ஞானம், அரசியல், மதம், சமூக சீர்திருத்தம் முதலியவைகளில் மிக உன்னத நிலையில் இருப்பதற்குக் காரணம் அவர்கள் தங்கள் தாய்நாட்டின் மீதும் தாய் மொழி மீதும் கொண்டுள்ள ஆழ்ந்த பற்றேயாகும். வங்காளி மக்கள் தாய் மொழிமீது கொண்டிருக்கும் பற்றுக்கு உதாரணமாக, சமீபத்தில் ஒரு சம்பவம் நடந்திருக்கிறது. லண்டன் சர்வகலாசாலையின் நூற்றாண்டுவிழா சமீபத்தில் நடந்துவருவது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அவ்விழாவுக்கு கல்கத்தா சர்வகலாசாலையின் சார்பாக அதன் உப அத்தியட்சகர் ஒரு வாழ்த்துச் செய்தி யனுப்பி யிருக்கிறார். அச் செய்தியை அவர் எம்மொழியில் எழுதி யிருப்பாரென்று நினைக்கிறீர்கள்? ஆங்கிலத்திலேயே எழுதியனுப்பி யிருப்பாரென்று யாவரும் நினைப்பது சகஜமே; ஏனென்றால் வாழ்த்து அனுப்பப்படுவது லண்டன் சர்வ கலாசாலைக்கு ஆதலால் என்க. ஆனால், கல்கத்தா சர்வ கலாசாலை உப அத்தியட்சகர் அவ்வாறு செய்யவில்லை. அவ் வாழ்த்துச் செய்தியை வங்காளி மொழியில் வரைந்து அனுப்பியிருக்கிறார். இதைக் கேட்டு, தமிழ் மக்களாகிய நாம் தலைகுனிய வேண்டாமா? வங்காளிகள் கொண்டுள்ள தாய்மொழிப்பற்றில் ஆயிரத்தில் ஒரு கூறுகிலும் நமக்கு இருக்கிறதா? வங்காளிகள் காட்டிவரும் தாய் மொழிப்பற்றைப் போற்றும் வகையிலாயினும், தமிழ்மக்கள் தங்கள் தாய் மொழியில் பற்றுக்கொண்டு தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வேண்டுவன செய்வார்களா?

---

## குபேர நாட்டிலும் பஞ்சமா?

உலகிலேயே மிகவும் பணக்கார தேசமென தற்போது கருதப்படுவது அமெரிக்கா நாடாகும். அங்குதான் மிஸ்டர் ராக்பெல்லர், மிஸ்டர் போர்டு போன்ற கோடீஸ்வரர்கள் ஏராளமாக இருக்கின்றனர். அதனாலேயே அந்நாட்டைக் குபேர பட்டணமென வருணிக்கப்படுகிறது. அப்பேர்ப்பட்ட நாட்டிலும் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறதென்றால் யாரும் ஆச்சரியப் படாதிருக்க முடியாது. அமெரிக்காவிலுள்ள பற்பல மாகாணங்களிலும் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறதாம். அப் பஞ்சத்தை நிவாரணஞ் செய்து மக்களுக்கு உதவி செய்ய அந்நாட்டு விவசாய மந்திரி மிகத் தீவிரமாக வேலை செய்து வருகிறார். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் மிஸ்டர் ரூஸ்வெல்டும் "கோடிக் கணக்கான மக்களுக்கு உதவிசெய்ய சர்க்கார் சித்தமா யிருக்கின்றனர்" எனப் பத்திரிகை நிருபர்கள் வாயிலாகத் தெரிவித்திருக்கிறார். இவ்விதம் பணக்கார நாட்டில் பஞ்சம் என்றால், அந்நாட்டுச் சர்க்காரும் மந்திரிமாரும் மும்மரமாக வேலை செய்கின்றனர். தரித்திரமே தாண்டவமாடிக் கொண்டிருக்கும் நம் நாட்டிலோ, எங்கு பார்த்தாலும் பஞ்சம், பஞ்சம் என்று

சதா கேட்டுக் கொண்டிருந்தாலும் சர்க்காரோ, மந்திரிமார்களோ ஒன்றும் பரிகாரந் தேடுவதாகத் தெரியவில்லை. அவர்களுக்கு தேர்தல் காலத்தி லன்றி, மற்ற சமயங்களில் பொதுமக்களைப்பற்றிக் கவலையேது?

---

## மகாத்மா-ஜவஹர் சம்பந்தம்

மகாத்மாஜிக்கும் பண்டித ஜவஹர்லாலுக்கு மிடையில் சிற்சில விஷயங்களில் அபிப்பிராய பேதமிருக்கலாம். அதனாலேயே பரஸ்பரம் மதிப்பு வைப்பதிலோ, அன்புடன் இருப்பதிலோ அல்லது ஒரே லக்ஷியத்துக்காகப் பாடுபடுவதிலோ அவர்கள் இருவருமே சிறிதும் பின் வாங்கவில்லை. மகாத்மாவுக்கு பண்டித ஜவஹர்லாலிடம் புத்ரவாஞ்சை உண்டு. அவ்வாறே ஜவஹர்லாலுக்கும் மகாத்மாவிடம் பக்தி விசுவாசமுண்டு. அறிஞர் ஸ்லோகோம்ப் என்னும் ஆங்கில நிருபர் கூறுவதுபோல மகாத்மா உயிருடன் இருக்கும் வரையிலும் ஜவஹர் காந்திஜியின் சிஷ்யராக இருந்து அஹிம்சாக் கொள்கையை அனுஷ்டிப்பார். இத்தகைய சம்பந்தம் இவ்விரு பெரியார்களிடையே இருந்து வருகையில் தப்புந் தவறுமான பொய்க் கதைகளைப் பலர் கட்டி விடுகின்றனர். இது வருந்தத் தக்கதாகும், இத்தகைய கட்டுக்கதைகளைக் கண்டு அஹிம்சா மூர்த்தியாகிய மகாத்மாஜி மனங்கசிந்து உருகுகிறார். அமெரிக்கப் பத்திரிகை யொன்றில், அதிலும் மகாத்மாஜியிடம் பரம விசுவாசங் கொண்ட ஒருவர் ஆசிரியராக இருக்கும் ஒரு பத்திரிகையில் வெளியாகியுள்ள செய்தியானது மகாத்மாவையே திடுக்கிடச் செய்து விட்டது. அவர் மனதில் கூட எண்ணாத பல விஷயங்களை அவர் தமது வாயால் கூறியதாகச் செய்தி பத்திரிகையில் வெளியானால் திடுக்கிடாமல் என்ன செய்வது? பண்டித ஜவஹர்லால், மகாத்மா தமது வாழ்நாளில் செய்து வைத்த வேலைகளையெல்லாம் நாசமாக்கி விட்டதாகவும், அரசாங்கத்தின் அடக்குமுறை செய்யாத வேலையை ஜவஹரின் கொள்கை செய்து விட்டதாகவும் மகாத்மாவே கூறியதாக அப் பத்திரிகையில் காணப்படுகிறது! இதற்கு மகாத்மா பதில் அளிக்கையில், 'நான் அவ்விதம் மனதில்கூட நினைத்ததில்லை. நான் செய்து வந்த வேலை அவரது திட்டத்தால் நாசமடையாது; பிரிட்டிஷாரின் உறுதியான அடக்கு முறையுங்கூட எனது வேலையைப் பாதித்ததாக நான் நினைத்ததில்லை.' என்று கூறி யிருப்பது கவனிக்கத் தக்கது. மேலும் அவர்களிடையே போட்டி பலமாக இருப்பதாகச் சொல்லப்படும் பொய்ப்புகாருக்கு மகாத்மாஜி பதில் கூறுகையில், 'எங்களிடையே எத்தகைய போட்டியுமில்லை. ஆனால் பொதுவான கொள்கையை அனுஷ்டிப்பதில் நாங்கள் போட்டி யிடுவதாகக் கொள்ளலாம். குறிப்பிட்ட ஒரே லக்ஷியத்தையடைய நாங்கள் வேலை செய்து வருகையில் சில சமயங்களில் அவர் ஒரு வழியாகவும் நான் ஒரு வழியாகவும் செல்லக்கூடும். ஆனால் மீண்டும் ஒரு இடத்தில் நாங்கள் பரஸ்பரம் அதிக அன்னியோன்னியமாக ஒன்று சேரவே பிரிகிறோமென்பதை உலகத்தினர் அறியவேண்டும்' என்று விளக்கி யிருப்பதையும் இத்தகைய புகார்களைக் கூறுவோர் கவனிப்பார்களாக.

---

## பசியால் வாடுவோர் மகஜர்

நமது நாட்டில் இப்போது வேலையில்லாத் திண்டாட்டமும் அதன் காரணமாகப் பசிப்பிணியும் மிக்க அதிகமாக இருக்கிறது. இவ்வாறு திண்டாடுவோர் எவ்வளவுதான் பத்திரிகைகள் மூலமும், பொதுக் கூட்டங்கள் மூலமும் முறையிட்டாலும் அதைக் கவனிப்பாரில்லை. இப்பால் சொற்ப காலமாக எங்கும் வேலை யில்லாத் திண்டாட்டத்தைப் பற்றியும், அதற்கான பரிகாரங்களைப்பற்றியும் பேசப்படுகிறதே யொழிய அனுஷ்டானத்திற்கு வரக்காணோம். ஆகவே ஜனப் பிரதிநிதிகளும், அரசாங்கத்தாரும் இதில் தக்க சிரத்தை எடுத்துக்கொள்ளும்படி செய்வதற்காக ஒரு கோஷ்டியினர் கண்ணனூரிலிருந்து புறப்பட்டுச் சென்னைக்குக் கால் நடையாக வந்து கொண் டிருக்கிறார்கள். அவர்கள் சென்னை சட்டசபை அங்கத்தினர்களை அச் சபையில் கண்டு ஒரு மகஜர் கொடுக்கப் போகிறார்கள். அவர்கள் கொடுக்க விருக்கும் அம் மகஜரின் சாராம்சம் பத்திரிகைகளில் வெளியிடப் பட்டிருக்கிறது. அதில் அவர்கள் கூறுகிறபடி ஒவ்வொரு மனிதனும் போதிய உணவு பெறுவது அவனது பிறப்புரிமையாகும். இதனால்தான் பாரதியாரும் ஒருவனுக்கு உணவில்லை யெனில் ஜகத்தினை அழித்திடுவோம் என்று கர்ஜனை செய்துள்ளார். லட்சக் கணக்கானவர்கள் வேலையின்றிச் சோற்றுக்குத் திண்டாடும்போது ஒரு சிலர் மட்டும் அநாவசியமாக வீண் ஆடம்பரங்களில் பெரும்பொருள் செலவழிப்பது அருவருக்கத் தக்கதாகும். இந்த நிலைமையை மாற்றி எல்லாரும் சௌகரியமாக இருக்கும்படி செய்வது சர்க்காரின் கடமையாகும். அவ்வித சக்தியும் சர்க்காரிடமே இருக்கிறது. மெம்பர்களனைவரும், கால் நடையாக வரும் பசியால் வாடுவோராகிய அந்தக் கோஷ்டியினரை அனுதாபத்துடன் வரவேற்று அவர்களின் மகஜரில் கேட்டுக் கொண்டிருக்கிறபடி வேலையில்லாத் திண்டாட்டத்தை யொழிக்க வழி செய்வார்களென்றும், சென்னை அரசாங்கத்தாரும் அவர்களுக்குத் துணையாக இருப்பார்களென்றும் நம்புகிறோம்.

---

## குறைப்பதா? அல்லது சீர்திருத்துவதா?

நமது நாட்டில் இப்போது படிப்பாளர்களிடையே வேலையில்லாக் கஷ்டம் அதிகரித்திருக்கிறது. இது உடனே பரிகரிக்க வேண்டிய விஷய மென்றும், தக்க பரிகாரம் தேடாவிட்டால் இதனால் பல ஆபத்துகள் ஏற்படலா மென்றும் அறிஞர்கள் ஆராய்ந்து கூறுகின்றனர். ஆகவே வேலையில்லாக் கஷ்டத்துக்கான பரிகாரங்களைப் பற்றி யோசிக்கும் நிபுணர்கள் சிலர் கலாசாலைக் கல்வியில் தேர்ச்சி பெறும் மாணவர் தொகையைக் குறைத்து விடவேண்டு மென்றும், வேறு சிலர் அவ்வாறு குறைப்பதை விடக் கல்வி முறையைத் தக்கபடி சீர்திருத்தி மாணவர்களின் வாழ்க்கையில் அக் கல்வி யறிவு பயன்படுமாறு செய்ய வேண்டு மென்றும் கூறுகின்றனர். எவ்வாறாயினும் வேலையில்லாக் கஷ்டத்துக்கும் கல்வி முறைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது அனைவராலும் ஒப்ப முடிந்த உண்மை. சர். தேஜ் பகதூர் சாப்ரூ அவர்களும் கல்வி முறையைத் தக்கபடி திருத்துவதால் வேலையில்லாமல் இளைஞர்கள் திண்டாடுவதைத் தடுக்கலாம் என்று அபிப்பிராயம் தெரிவித்துள்ளார். இந்தியப் பேரறிஞர் சர். ராதாகிருஷ்ணன் அவர்களும்

சர்வதேச சங்கத்தின் கல்வியறிவாளர் கூட்டுறவுக் கமிட்டியில், 'சர்வ கலா சாலைகளில் அதிகமான மாணவர்களைச் சேர்த்துக் கொள்வதை நிறுத்தி மாணவர்களின் தொகையைக் குறைக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. இந்தியாவில் இப்போது செய்ய வேண்டியது மாணவர்களின் தொகையைக் குறைப்பதல்ல; ஆனால் கலாசாலைப் படிப்பைச் சீர்திருத்த வேண்டியதே யாகும்' என்று கூறியிருப்பது சிந்திக்கத் தக்கதாகும். உண்மையிலேயே கலாசாலைகளில் கல்விகற்கும் மாணவர்களின் தொகையைக் குறைப்பதை விடக் கல்வி முறையைத் திருத்துவதே சரியான பரிகாரமாகும். நல்ல கல்வி இல்லா விட்டால் ஜனங்கள் தம் வாழ்க்கையில் சீரிய லக்ஷியத்தை உடையவர்களாக இருக்க முடியாது. ஆகவே நல்ல முறையில் கல்வியை அளிக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும்.

---

## கவி தாகூர் எச்சரிக்கை

நமது தேசத்துக்குப் பெருமையை அளித்தவர்களில் ஒருவரான கவி ரவீந்திரநாத தாகூர் சாதாரணமாக இலக்கியத் துறையிலேயே ஆராய்ச்சி செய்து வருபவர். அப்படிப்பட்ட அவரும் இந்தியாவின் ராஜீய விஷயங்களில் ஏற்பட்டு வரும் ஆபத்தான நிலைமையைப் பார்த்தே மௌனமாக இருக்க முடியாமல் இதில் தலையிட்டு ஒரு எச்சரிக்கை செய்ய முன் வந்திருக்கிறார். பிரிட்டிஷ் சர்க்கார் அளித்திருக்கும் வகுப்புத் தீர்ப்பானது நமது இந்திய சமூகத்தையே பிரித்து விடுவதாக இருக்கின்றது. இவ்வாறு இந்தியாவைத் துண்டு போட்டு விட்டால் இறுதியில் சமூகத்தின் பூதவுடல் மட்டுமே மிஞ்சும். ஆதலால் காங்கிரசும் இந்த வகுப்புத் தீர்ப்பை ஏற்காமலும் நிராகரிக்காமலும் இருக்கிறது. தேசீய விவகாரங்களில் வகுபபு வாதத்தைப் புகுத்துவதானது நல்ல தேகத்தில் விஷம் ஏற்றுவது போல என்றும் அது க்ஷயரோகத்தைப் போல் ஆளைக் கொன்று விடும் என்றும் ஸ்ரீ. சி. ராஜகோபாலாச்சாரியார் கூறுகிறார். அதையே இப்போது கவி ரவீந்திரரும் எச்சரிக்கை செய்கிறார். வகுப்புத் தீர்ப்பைப் பற்றி அவர் கல்கத்தா கூட்ட மொன்றில் பேசுகையில் 'தேசீய ரத்தத்தில் வகுப்புவாத விஷங் கலப்பதான ஏற்பாடு நாட்டுப் பொருளைச் சுரண்டிச் செல்வதை விடத் தீமையானது. சந்தேகத்தின்மீது பிரஜைகளைத் தண்டிப்பதை விடக் கேவலமானது. ஏனெனின் இவ்வேற்பாட்டின்படி எதிர்காலம் முழுவதற்கும் மக்கள் ஒருவகையான தண்டனை ஏற்றவர்களாகிறார்கள்' என்று குறிப்பிட்டிருப்பது தேசியவாதிகளனைவராலும் கவனிக்கத் தக்கதாகும். மேலும் ஸ்ரீ. தாகூர் சொல்வது போல் அரசியல் இயக்கத்தில் வகுப்புப் பிரிவினை தீங்கைப் பயக்கு மென்பதை நம்மைவிடப் பார்லிமெண்ட் அனுபவம் பெற்ற நம்மை ஆளுவோருக்குத் தெரியும். அவ்வாறிருந்தும் நம்மீது ஆங்கிலேயர்கள் அதைச் சுமத்தியிருக்கும்போது நாம் சாமர்த்தியமாக அக் கொடுமையினின்றும் தப்பித்துக் கொள்ள வழி தேட வேண்டும். அதற்கு நாம் சமூக ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டு தேசீயப் போராட்டத்தைப் பலப்படுத்துவதே சரியான வழியாகும். வகுப்புவாதிகள் கவி சிரேஷ்டரான ரவீந்திரரின் எச்சரிக்கையைக் கவனிப்பார்களென்று நம்புகிறோம்.

---

## அசெம்பிளியில் சீர்திருத்த மசோதாக்கள்

இந்தியா சட்ட சபையில் சில சமூக சீர்திருத்த மசோதாக்கள் சில பிரபலஸ்தர்களால் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. இப்போது அச்சபையில் முற்போக்கான கொள்கையுடையவர்களே அதிகமாக இருக்கின்றனர். மேலும் பூரண சுயேச்சையையே நோக்கமாகக்கொண்டுள்ள காங்கிரஸ்காரர்களும் செல்வாக்குடையவர்களாக இருக்கின்றனர். சமூக சீர்திருத்தங்களைப் பொதுவாக மகா ஜனங்களிடையே பிரசாரம் செய்து அமலுக்கு வரும்படி செய்வது நல்லதேயாயினும் சில சமயங்களில் சட்டத்தின் மூலமும் சில சீர்திருத்தங்களை அமலுக்குக் கொண்டுவர வேண்டியதாகத்தான் இருக்கிறது. இதற்கு முன்னும் சில சீர்திருத்த சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இப்போது ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமை சம்பந்தமாக ஸ்ரீ. தேசமுகியும், கலப்பு மணங்களைச் செல்லுபடி யாக்குவது பற்றி டாக்டர். பகவான் தாஸும், தீண்டாதார்க்குள்ள துயரங்களைப் பரிகரிப்பதற்காக ஸ்ரீ. எம். சி. ராஜாவும் மசோதாக்களைக் கொண்டுவர்திருக்கிறார்கள். இம்மசோதாக்கள் ஒவ்வொன்றும் முக்கியமானதே. தாழ்த்தப்பட்டாருக்குப் பிரஜா உரிமையும் பூரணமாக இல்லாதபடி இப்போதைய ஹிந்து லா தடுப்பதால் அந்நிலைமை மாறி அவர்களும் அரசாங்க சட்டத்தின் முன்னிலையிலேனும் சம உரிமையுடன் இருப்பதற்கே இம்மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. மூன்றாவதாக ஸ்ரீ. தேசமுகியின் ஹிந்து மாதர் சொத்துரிமை மசோதாவை உடனே நிறைவேற்றி வைத்தல் மிக அவசியமாகும். ஹிந்து மாதர்கள் குடும்பத்திலும் சமூகத்திலும் சிறிதும் அந்தஸ்து இல்லாமல் எங்கும் தாழ்மையுடன் நடத்தப்படுவதற்குக் காரணமே அவர்களுக்குச் சொத்துரிமை இல்லாததுதான். மாதர்கள், தந்தை, கணவன், சகோதரர்கள் ஆகியோருடைய தயவிலேயே இருக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். நல்ல பணக்காரர்களுடைய மனைவியரும் கணவன்மாரின் மரணத்துக்குப் பின் உணவுக்கும் வழியின்றித் திண்டாடுவதைப் பார்த்திருக்கிறோம். எத்தனையோ விதவைகளில் பலர் தங்களுக்கென்று வயிற்றுப் பிழைப்புக்கு வழி இல்லாத காரணத்தாலேயே மானத்தையும் விற்க வேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே கிறிஸ்தவ, முஸ்லிம் சமூகங்களில் இருப்பதுபோலவே நம் ஹிந்து சமூகத்திலும் மாதர்களுக்குச் சொத்துரிமை இருத்தல் மிக அவசியமாகும். இத்தகைய சீர்திருத்தங்களால் மதத்துக்கு எத்தகைய ஆபத்தும் வந்துவிடாது. அசெம்பிளி மெம்பர்கள் வரப்போகும் சபைக் கூட்டத்தில் இமமசோதாக்கள் நிறைவேறும்படி ஆதரவளிப்பார்களென்று நம்புகிறோம்.






# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(79-ம் பக்கத் தொடர்ச்சி.)

## எட்டாம் அத்தியாயம்.

அநேக நாட்கள் வரையிலும் இலக்ஷ்மிபாய் தனது அறையை விட்டு வெளியில் வராமல் இருந்து வந்தாள். சதா அழுது அழுது அவளது கண்களில் கண்ணீர் கூட வரண்டு விட்டது. சரீரம் மிகவும் மெலிந்து விட்டது. அந்தபுரத்திலுள்ள ஸ்த்ரீகளுக்கு தனக்கு உடம்பு அசௌக்கியம் என்பதாகப் பொய் சொல்லிக் கொண்டு வந்தாள், தஞ்சாவூர் அரண்மனையில் வைத்தியர்களுக்குக் குறைச்சலா? ஆனால் இலக்ஷ்மிபாயின் வியாதி இந்த வைத்தியர்களால் தீருமா ? இப்படியே சில நாட்கள் கழிந்தன.

இராஜ துரோகமாகிய சூழ்ச்சியில் ஏன் ஹுசேன் ஈடுபட்டிருந்தான் என்ற சந்தேகம் அவளை ஒரு புறம் துன்புறுத்தியது. அவனுக்கு என்ன விதமான தண்டனை விதிக்கப்படுமோ வென மற்றொருபுறம் அவள் கவலை கொண்டாள். அப்படியே ஒரு வேளை அவனை யிழக்க நேரிட்டால் அதன் பிறகு தன் கதி என்னவாகுமோ வென நினைத்ததும் அவள் உடல் நடுங்கியது.

"ஏண்டி, சேடி, அதோ தெரிகிறதே உப்பரிகை அதன் பேரில் ஏறி நின்று பார்த்தால் நாகூர் மசூதியின் மனோரா தெரியுமாமே ? நாம் ஒரு நாள் ஏறிப் பார்த்து வரலாம் வருகிறாயா ?" என்றாள் ஓர் நாள் இலக்ஷ்மிபாய்.

"ஆம், அம்மா. ஆனால் நாம் இப்போது அங்கே போக முடியாது."

"ஏண்டீ ?"

"அங்கே தான் ஒரு சர்தாரை சிறை வைத்திருக்கிறார்கள்."

"என்ன குற்றத்திற்காக ?"

"நமது ராஜாங்கத்துக்கு விரோதமாக சதி செய்ததற்காக"

"யார் அந்த சர்தார் ?"

"யாரோ ஒரு புதிய சர்தாராம். சிறுவயதாம். அவர் மேலே ராஜா

ரொம்பப் பிரியமாய் இருந்தாராம். இப்போ அவ்வளவுக்கவ்வளவு கோபமாய் இருக்கின்றாராம்."

"அங்கே யிருந்து இந்தக் கைதி தப்பித்துக் கொண்டு ஓடி விட முடி யாதோ?"

"எப்படி முடியும்? சதா போர்வீரர்கள் மாற்றி மாற்றி கடுங்காவல் புரிந்து வருகிறார்களே!"

"அந்தக் கோபுரத்திற்கும் கீழே யிருந்து மன்னார்குடி இராஜ கோபால சாமி கோவிலுக்கு சுரங்க வழி இருப்பதாகச் சொல்கிறார்களே, அதன் வழி யாய் ஓடிவிட்டால் என்ன செய்கிறது."

"முடியாதம்மா, ஒருநாளும் முடியாது. அந்த வழி யிருப்பது மஹா ராஜா ஒருவருக்குத்தான் தெரியும். அவரை அல்லாமல் வேறு யாரும் அதைத் திறக்க முடியாது."

"அது போனால் போகட்டும், அந்தக் கைதிக்கு ஆகாரம் எங்கிருந்து போகிறது?"

"நமது அரண்மனை சமையலிலிருந்து தான் போய்க் கொண்டிருக்கி றது."

"அப்படியா சரிதான்." என்று சம்பாஷணையை முடித்துக் கொண் டாள் இலக்ஷ்மிபாய். ஹுசேனுக்கு எப்படியாவது ஒரு கடிதம் அனுப்பி விட வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டாள். பெண்கள் ஓர் எண்ணத்தைக் கொண்டு விட்டால் அதை எப்படியும் பூர்த்தி பண்ணி கொண்டு விடுவார்கள். அதில் அவர்கள் காட்டும் சாதுரியத்தை ஆண்களால் வெல்ல முடியாது.

மறு நாளிலிருந்து ஹுசேனுக்கு ஆகாரம் போகும் பொழுது ஒரு அப் பத்தில் பனை ஓலை நறுக்கு ஒன்றில் எழுதிய காதல் கடிதம் போய்க் கொண் டே யிருந்தது. பதில் ஒன்றும் வருவதற்கு வழியில்லா விட்டாலும் தனது கடிதம் போய் தன் காதலன் கையில் சேருகிற விஷயத்தை எண்ணி எண்ணி ஆனந்த மடைவாள் இலக்ஷ்மிபாய்.

ஓர் நாள் ஆப்பத்தில் பாதி திரும்பி வந்தது. அதை இலக்ஷ்மிபாய் ஒரு வரும் அறியாமல் எடுத்துக் கொண்டு போய் விண்டு பார்த்தாள். அதற்குள் ஒரு சிறு காகிதத் துண்டு நான்காய் மடித்து வைக்கப்பட்டிருந்தது. மிக ஆச்சர்யத்துடன் அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள். கொட்டை கொட் டையாய் மராத்தி பாஷையில் சில வார்த்தைகள் எழுதி யிருந்தது. மசியி னால் எழுதாமல் கலங்கிய மஞ்சள் நிறமான ஒரு வஸ்துவால் தடித்த கோடுக ளாக தீர்த்தி எழுதி யிருந்ததால், எதைக் கொண்டு எழுதப்பட்டது என்று கண்டு பிடிப்பதற்காக அந்தக் காகிதத்தை மூக்கின்மேல் வைத்து முகர்ந்து பார்த்தாள். அது வாழைப் பழத்தினால் எழுதப்பட்டிருக்கிறது என்று உடன தெரிந்து கொண்டாள். காகிதம் கிடைத்த ஹுசேனுக்கு மசி அகப்பட வில்லை! பிறகு மெதுவாய் அதை வாசித்தாள். ஆனந்த பரவசம் கொண்டாள். ஏன்? அதில் உள்ள சந்தோஷச் செய்தியை அவள் கனவில் கூட எதிர் பார்க்கவில்லை.

"நடுநிசி இருட்டு மஹாலுக்கு வா—ஹ-ா"

என்ற அந்தச் செய்தியை கண்சிமிட்டாமல் உற்றுப் பார்த்தபடியே சிறிது நேரம் நின்றாள். அநேகந்தடவை அதை முத்தமிட்டுக் கொண்டாள். இரவு நடுநிசி எப்போது வரும் என்று ஒரே சிந்தனையாகவே யிருந்தாள். தூக்கம் பிடிக்குமா? காலம் ஓடுவது தெரியுமா? இவள் சிறுவயதில் அநேக வருஷங்கள் வரையில் இந்த அரண்மனையிலேயே இருந்தவளாதலால், அங்கே உள்ள சுரங்கவழி, கள்ளவழி, திகைக்கவைக்கும் இருட்டு மஹால் முதலிய இடங்களெல்லாம் அவளுக்கு நன்றாய்த் தெரியும்.

நடுநிசியானதும் தனது கட்டாரியையெடுத்து இடுப்பில் செருகிக்கொண்டாள். கருமை நிறமுள்ள ஒரு சால்வையை எடுத்து தன் சரீரத்தை உச்சு முதல் உள்ளங்கால்வரை மூடிக்கொண்டாள். அந்தப்புரத்தில் எல்லோரும் தூங்கிவிட்டார்களா வென்று சற்று நின்று கவனித்தாள். எங்கும் நிசப்தமாகவே யிருந்தாலும் அந்தபுரத்துக்குச்சமீபமாய் இருந்த அரண்மனைத்தோட்டத்தில் காற்றினுல் அசைக்கப்படும் சோலைகளின் ஓசை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது.

இருட்டு மஹால் என்பது அந்தபுரத்துக்குச் சமீபமாய் உள்ள ஓர் மண்டபம். சூரிய வெளிச்சம் கொஞ்சம்கூட இங்கு செல்லாதபடி சிற்பசாஸ்திர அனுமானப்படிக் கட்டப்பட்டது. பகல் உச்சி வேளையிலேயே இங்கு அமாவாசை இருட்டைப்போல் பத்துமடங்கு இருக்கும். ஆதலால் இரவு நடுச்சாம வேளையில் கேட்கவேண்டுமா? இதையன்றி இதில் சூட்சமான வழிகள் உண்டு. யாராவது உள்ளே சென்றுவிட்டால் வெளியே வர முடியாமல் திகைத்துப் போய் விடுவார்கள். கருமை நிறமுள்ள ஓர் உருவம் இந்த மண்டபத்திற்குள் நுழைந்தது. உடனே உள்ளிருந்து "லெக்ஷ்மீ, வா" என்று ஒருகுரல் மிகவும் மெதுவாய்க் கூப்பிட்டது. அந்தக் குரல் மிகவும் மங்கலாய் இருந்தபடியால் அது யாருடையதென்று கண்டுபிடிக்கக் கூடவில்லை. ஆனுல் அது ஹ-ாசேனுடையது அல்ல என்றுமட்டும் கண்டுகொண்டாள் இலக்ஷ்மிபாய். உடனே பெருத்த சந்தேகம் அவளைப் பிடித்துக்கொண்டது. தனது கட்டாரியை உருவிக் கையில் வைத்துக்கொண்டாள். வந்தவழியே ஓடிவிடலாமா வென்று நினைத்தாள். அப்பொழுதுதான் அவளுக்கு அச்சம் தோன்றியது.

"இலக்ஷ்மீ, பயப்படாமல் வா" என்று அதேகுரல் இப்பொழுது மிகவும் சமீபத்தில் கேட்டது. மறுவினாடி ஒரு முரட்டுக்கை கட்டாரி பிடித்திருந்த அவளது கரத்தை இரும்பு பிடிபோல் பற்றியது. இலக்ஷ்மிபாய் வாய் பேசாமல் திமிறினாள். அவளது கையிலிருந்த கட்டாரி வெடுக்கென்று பிடுங்கப்பட்டது. கலுக்கென்று அது தூரத்தில் போய்விழுந்து கருங்கல்லில் மோதுண்ட சத்தம் அவள் காதில்பட்டது. அப்பொழுது யாரோ பெருமூச்சு விட்டதுபோன்ற ஒரு ஓசை மண்டபத்திற் குள்ளேயே இருந்து வருவது போல் அவளுக்குத் தோன்றியது. ஆனுல் ஒருவரும் தன் உதவிக்கு வரவில்லை தான் மோசடியாய் எந்தத் துஷ்டனிடத்திலேயோ சிக்கிக்கொண்டு விட்டதை இலக்ஷ்மிபாய் இப்பொழுதுதான் பூரணமாய் உணர்ந்தாள். தன் கையை அஞ்சாது பிடித்திருப்பவன் பூதத்தைப்போல் பருத்த முரடன் என்பதை அவள் அறிந்தாள். தன் கையிலிருந்த கட்டாரியோ போய்விட்டது. இனி அவள் என்செய்வாள்.

"நீ யார்? அஞ்சாத நெஞ்சுபடைத்த நீ யார்? விடு என் கையை" என்று வாய் திறந்தாள் இளங்குமாரி. அவள் குரலில் பயத்தினால் ஏற்பட்டு நடுக்கம் ஒன்றும் காணப்படாமல் கம்பீரமாய் இருந்தது.

"நான் யார்! நான் யாராயிருந்தால் உனக்கென்ன? உனது நன்மைக்காகவே இங்கே உன்னை வரவழைத்தேன்."

"ஹோ! எனது நன்மைக்கு!" என்று பரிகசித்துக்கொண்டு தனது கையை அவனது பிடியினின்றும் விடுவித்துக் கொள்வதற்காகத் திமிறினாள்.

"ஆம், உண்மையில் உனது நன்மைக்காகத்தான்."

"நல்லது. முதலில் என் கையை விடு. நான் ஓடிவிட மாட்டேன்."

"ஓடிவிடுவாயா? ஹூம். வேண்டுமானால் நீ ஓடிவிடு, ஆனால் நீ எங்கு போனாலும் உனது சிகை என் கையில் சிக்கி இருக்கிறது என்பதை அறி. அதை நான் இஷ்டப்பட்டபோது எப்படி வேண்டுமானாலும் இழுத்து ஆட்டிவைப்பேன்" என்று சொல்லிக் கொண்டே அவளது கையை விட்டு விட்டான். அவன் குரல் முன்போலவே கம்மியதாய் இருந்தபடியால் அந்தத் துஷ்டன் யார் என்பதை அம்மங்கையால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் சொல்லிய வார்த்தைகளைச் செவியில் வாங்கியதும் அவளது மார்பில் அம்பு தைத்தது போலிருந்தது. அவனது கொடிய பிடியினின்றும் தான் விடுபட்டதைக் கூட அவள் கவனிக்கவில்லை.

"என்ன, என்ன? என் சிகை துஷ்டனாகிய உன் கையில் சிக்கியிருக்கின்றதா? அச்சமில்லாமல் என்னை அவமரியாதையாய்ப் பேசும் நீ யார் என்பதைத் தெரிவி. உனக்குத் தகுந்த சிட்சை செய்யச் சொல்கிறேன்."

"பூப்பூ! என்னையா? என்னையா சிட்சைசெய்யப் போகிறாய்? அது இருக்கட்டும், நான் யார் என்று தெரிவித்தால் பிறகு நான் சொல்லுகிறபடி கேட்கிறாயா?"

"நீ சொல்லுகிறபடி நான் ஏன் கேட்கவேண்டும்?"

"ஏனென்றால் உன் சிகை என் கையில் சிக்கியிருப்பதினால்தான். ஹ, ஹ, ஹ." என்று சொல்லிச்சிரித்தான். அவனது அருவருப்பான தொனி பைசாசங்களின் சிரிப்பைப்போல் மண்டபம் முழுவதும் எதிரொலித்தது.

"ஏ, கோழை மனிதனே! ஏ, பதரே! ஏ, பாதகா! வஞ்சகமாய்ப் பொய்க்கடிதம் அனுப்பிய அற்ப மனிதனே......" என்று இலக்ஷ்மிபாய் சினந்து கூற ஆரம்பித்தாள்.

"பெண்ணே, வாயை மூடு. வீணாக உன் வார்த்தைகளை செலவழிக்க வேண்டாம். நான் யார் தெரியுமா? என்னையா இந்தக் கேவலமான வார்த்தைகள் கேட்கின்றாய்? பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நாடெல்லாம் கிடுகிடென நடுங்கக்கூடிய மாபத்கானையா கோழை என்கிறாய்? நீ ஒரு பெண் பிள்ளையாய் இருப்பதினால் உன்னை சும்மா விட்டேன். கபர்தார்!" என்றான் மாபத்கான்.

"மாபத்கான்! ஓ! வஞ்சகா! நீ கோழை யல்லாது வேறு என்ன? சர்தார் ஹூசேனிடம் நீ உதை பட்டதை மறந்து விட்டாயோ? அது போனால் போகட்டும். ஒரு நொண்டி சேவகனிடம் உதை வாங்கிக்கொண்டு உருண்டாயே; அதையும் மறந்து விட்டாயோ? நீ மறந்து விட்டாலும் அதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஆயிரக்கணக்கான ஜனங்கள் மறந்திருக்க மாட்டார்கள். நயவஞ்சகா!" என்றனள்.

"என்னையா ஹூசேன் உதைத்தான்? நான் மாத்திரம் நினைத்திருந்தால் அன்று தினமே அந்தப் பயலை சின்னாபின்னமாக்கி யிருப்பேன்! சிறு பயல்தானே என்று கொஞ்சம் அலக்ஷியமாய் இருந்ததால் தவறிப் போய் விட்டது. இல்லாவிட்டால் அன்றே அவனைத் தவிடுபொடி யாக்கி ஊரை விட்டு விரட்டி யிருக்க மாட்டேனா?"

"பேஷ், பேஷ்! கையாலாகாவிட்டாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்று பேசிக் கொள்கின்றனையோ? போதும் போதும் உன் வீரத்தனம்! வழியை விடு நான் போகவேண்டும்" என்று நகர்ந்தாள்.

"ஓடிப் போகவா பார்க்கின்றாய்? நீ அந்தத் துலுக்கப் பையனுக்கு ஆப்பத்துக்குள் அனுப்பிய ஓலைக்கடிதம் எல்லாம் இதோ என்னுடைய இடுப்பு வாரில் இருக்கின்றன. எங்கே? இப்போ ஓடு பார்க்கலாம்!-ஹூம்! காதல் கடிதமா? அப்பத்துக்குள்ளே போகிறதா? கபர்தார்! கபர்தார்! ஒரு ஓலை நறுக்குக்கூட அந்தப் பயலிடம் போய்ச் சேரவில்லை. நான் எல்லாவற்றையும் எடுத்து பத்திரப் படுத்திக்கொண்டு வந்தேன். மன்னார்குடிக்குப் போகும் சுரங்கத்தின் வழியாய் தப்பித்துக் கொள்ளவா யோசனை சொல்லிக் கொடுக்கின்றாய்? அந்தப் பயலைப்போலவே நீயும் ராஜத்துரோகம் செய்ய ஆரம்பித்துவிட்டாயா? இப்போது என்ன சொல்கிறாய்!" என்றான்.

இந்த வார்த்தைகளைக் காதில் கேட்டதும் இலக்ஷ்மிபாய்க்கு பொறி கலங்கியது. தலை சுழன்றது. தன்னை ஏதோ ஒரு பயங்கரமான பூதம் பிடித்துக்கொண்டுபோய் மிக இருட்டாய் இருக்கக்கூடிய ஒரு பாதாளலோகத்தில் விட்டிருப்பதாக அவளுக்குத் தோன்றியது.

"இப்பொழுது நான் சொல்கிறபடி கேட்கிறாயா? அல்லது இந்தக் கடிதங்கள் யாவற்றையும் ராஜாவிடம் கொண்டுபோயக் கொடுத்துவிடவா?" என்றான் அந்த மூர்க்கன்.

"அவைகளை என்னிடம் கொடுத்துவிடு. உனக்கு ஏராளமான திரவியம் தருகிறேன்" என்றாள் இளவரசி.

"உன்னை இராஜா சாகிபுவிடம் கொண்டுபோய்விட்டால் எனக்கு ஒரு பெரிய ஜாகீர் கொடுப்பாரே!"

"நான் சத்தம்போட்டு காவல்காரர்களை எழுப்பி உன்னைப் பிடித்துக் கொண்டு போகும்படி செய்வேன்."

(தொடரும்)

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

தாதுஞு ஆவணிமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1936ஞு ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ

| ஆவணிமீ | ஆகஸ்டு | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | ஞா | ச● 5-58 | ஆயி60 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 2 | 17 | திங் | அமா7-8 | ஆயி1-28 | சித்1-28அ | |
| 3 | 18 | செவ் | பிர9-28 | மக5-18 | சித்60 | |
| 4 | 19 | புதன் | துதி12-50 | பூர10-10 | அமி60 | |
| 5 | 20 | வியா | திரி17-18 | உத்16-8 | மர16-8சி | |
| 6 | 21 | வெள் | சது22-35 | அஸ்22-50 | அ22-50சி | |
| 7 | 22 | சனி | பஞ்28-50 | சித்30-10 | ம30-10அ | |
| 8 | 23 | ஞா | சஷ்34-43 | சுவா37-43 | சி37-43மர | |
| 9 | 24 | திங் | சப்40-35 | விசா44-53 | ம44-53சி | |
| 10 | 25 | செவ் | அஷ்45-25 | அனு51-10 | சி51-10மர | |
| 11 | 26 | புதன் | நவ48-53 | கே55-58 | சி55-58மர | |
| 12 | 27 | வியா | தச50-35 | மூல59-5 | சித்60 | ஆவணிமூலம்,சர்வ முகூர்த் |
| 13 | 28 | வெள் | ஏகா50-10 | பூரா60 | பிர60 | சர்வ, மத்வ ஏகாதசி [தம் |
| 14 | 29 | சனி | த 47-40 | பூரா0-3<br>உத்59-5 | சித்60 | பூரா கார்த்திகை நா-43-8<br>அவமாகம் [தம் |
| 15 | 30 | ஞா | திர43-13 | திரு56-12 | அ56-12ம | பிரதோஷம், சர்வ முகூர்த் |
| 16 | 31 | திங் | சது37-13 | அவி 1-45 | சித்60 | வியாதியஸ்தர் மருந்துண் |
| 17 | 1 | செவ் | ○30-15 | சத46-12 | மர60 | பௌர்ணமீ [ண |
| 18 | 2 | புதன் | பிர22-5 | பூர40-3 | அ40-3சித் | அதிகபாத்ரபகுளம் |
| 19 | 3 | வியா | துதி13-40 | உத்33-38 | சித்60 | சர்வ முகூர்த்தம் |
| 20 | 4 | வெள் | திரி5-15<br>சது57-13 | ரே27-23 | அமி60 | சங்காஷ்ட சதுர்த்தி |
| 21 | 5 | சனி | பஞ்49-58 | அஸ்21-40 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 22 | 6 | ஞா | சஷ்43-50 | ப❋ 16-53 | சித்60 | கிருத்திகை |
| 23 | 7 | திங் | சப்38-55 | கிரு13-13 | ம13-13அ | சராங்கம் வெட்ட, கடன் |
| 24 | 8 | செவ் | அஷ்35-18 | ரோ10-43 | அ10-43சி | ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி [தீர்க் |
| 25 | 9 | புதன் | நவ32-58 | மிரு9-40 | சித்60 | சுப முகூர்த்தம செய்ய |
| 26 | 10 | வியா | தச32-0 | திரு9-58 | மர9-58அ | மாடுகொள்ள |
| 27 | 11 | வெள் | ஏகா32-10 | புன11-25 | சி11-25ம | சர்வ, மத்வ ஏகாதசி |
| 28 | 12 | சனி | து33-25 | பூச13-58 | சி13-58ம | உத்திரா கார்த் நா-27-40 |
| 29 | 13 | ஞா | திர35-40 | ஆயி17-33 | சி17-33ம | பிரதோஷம், மாசசிவராத் |
| 30 | 14 | திங் | சது38-55 | மக22-0 | மர22-0சி | தானியம் செலவிட [திரி |
| 31 | 15 | செவ் | அ● 42-55 | பூர27-18 | சி27-18அ | சர்வத்திர அமாவாசை,கன்<br>னிரவி நா-53-30 |

1936 செப்டம்பர்மீ

| | | | |
|---|---|---|---|
| | | | சே |
| சனி | 7-கன்-புத<br>14-கன்-சுக்<br>31-சிம்ம-செ | | செ<br>சூரி<br>சுக்<br>புத |
| ராகு | குரு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS